சாவம் சிவம்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய

# நால்வர் நான்மணி மாலையின்

# உண்மையுரை.

இஃது
திருச்சி ஜில்லா, ஜெயங்கோண்டம் தாலூகா,
குடிக்காடு என்னும் மேலணிக்குழி,

நா. அ. சின்னச்சாமி முதலியார் குமாரன்
**வைத்தியலிங்கன் இயற்றியது.**

கமாலிய்யா பிரஸ் லிமிடெட், கூத்தாநல்லூர்.

லை] 15-8-1940. [அணா 6.

# பிழை திருத்தம்.



| பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 3 | சிரபுத்து | சிரபுரத்து |
| 25 | 3 | பொடர் | தொடர் |
| 31 | 3 | கழறிற்றவார் | கழறிற்றறிவார் |
| 36 | 1 | தகுருவன் | தருகுவன் |
| பக்கம் | | | |
| 45 | 16 | புரிரியுங் | புரியுங் |
| 54 | 20 | யடியான | படியான |
| 62 | 12 | அகவல் | விருத்தம் |

ஷெடி திருத்தங்களை தயவு செய்து இங்கிபால் திருத்தி எழுதிக் கொண்டு படிக்கவும்.

# முன்னுரை.



இப்பதிப்பில், நால்வர் நான்மணி மாலை பாக்களை என்னறிவின் அநுபவத்திற்கு எட்டிய வரையில் அக (உண்மை) உரையாக, ஷை நூலின் 11–14 கவியின் கருத்துப்படி எழுதத் துணிந்தேன். கற்றவர் குற்றங்களைந்து சுற்றத்தைக் கொள்வாராக. ஆனல், நால்வர்களையுஞ் சரீரத்தில குறிப்பிட்டு சொல்லியதை, சிலர்கள் தத்து (விருத்தி) வத்தில் சேர்த்து விட்டதாக எண்ணுவார்கள். நால்வரையும் பரசிவன் அம்சமென்று சொல்லுவதற்கு, சுந்தரம் பரவை சங்கிலிய ரிவர்கள், சயிலாயத்திலிருந்து பூவுலகத்தில் வந்தாரென்று அந்நூல் சொல்லி இருப்பதே போதிய சான்றாகும். தவிரவும், இவ்வுலகில்விவேகானந்தருக்கு, புராதனப் பெயர் நரேந்திரரென்று சொல்வர். அவர் மேலான அநுபவ ஆராய்ச்சியினல் விவேகானந்தரென்றும்; மோகனதாஸ் காந்தி என்ற பெயர், இடையில் மாகாத்மா காந்தி, பரமாத்மா என்றும், இன்னுமனேகர்களுக்கும், அநுபவ ஆராய்ச்சிக்குத்தக்கபடி பேர் அமைக்கப்பட்டிருப்பதுபோல் முற்காலத்தில் அநுபவத்தால் அறிவாகிய தன்னை தானுய் விளங்கின ஞானவான்களுக்கும், அவ்வப்பொழுது பெயர் அமைக்கப்பட்டிருக்கிறது. சரீரம்சடம் நாமரூபமுடையது. அது பேசாது, பாடாது, ஆத்மா அரூபம் நாமரூபமற்றது. அது பேசும். சீரோடு இசையாய்ப் பாடும். அதனல் நால்வரையும் சரீரத்தில், சரீரம் சரீரி, தேகம், தேகி, க்ஷேத்திரம் க்ஷேத்திரஞ்ஞன் என்றதற்கு ஒப்ப சரீரத்தில், பரயீரத்

மாவில் சீவாத்மாவை உரை செய்யப்பட்டது. தேடித் தேடொணாத் தேவனை (பரமாத்மாவாகிய) என்னுள்ளே தேடிக்கண்டு (சீவாத்மாவாகிய சிவத்தை) கொண்டேன்.

இந்நூலை இன்னும் அதிகமாக வெளிப்படுத்த விரும்பு வோர்கள் அவர்கள் தன் சொந்த சிலவில் எனது உத்திர வன்றியே டைட்டில் பேஜ் இதிலுள்ளது போன்றே அச்சிட்டு வெளிப்படுத்தலாமென்பதைத் தெரிவிக்கின்றேன்.

**சரீரங்குரு, சரீரத்தை குருவாக வைத்து சரீரத்திலுள்ள சீவ அறிவாகிய வைத்தியலிங்கன், தன்னையே புகழ்ந்துரைத்த துதி.**

வைத்திய லிங்கன் ஞான வான்மொழி பேசவல்லான்
செயித்திடுஞ் செகங்கள் மூன்றுஞ் சிவனருள் கருணையாலே
குருபரனாகத் தோன்றி குகை (இருதயம்) யீசர் குவலயத்தோர்
நலம்பெற நமச்சிவாய நல்குரு வவதரித்தான்.

காதலே கருணைக்குன்றே கயிலைவிட் டெம்மோர் போற்ற
பாதக மனிதனாக பரமனே பாரில் வந்தாய்
ஏத (மாயை)மாம் பொருள்களெல்லா மெழி(அருள்வெளி )லுருவாக்க
போதச் சித்தனாய் பொறியிற் றோன்றி புகலுவா னருளைத்தானே.

**பிள்ளை மங்கலம், வே. கந்தசுவாமி பிள்ளை தனதாசிரிய மங்கள வழுத்து.**

சாக்கிர முதலாய் நின்று சாட்சியை யுணர்வதற்கு
வாக்கினா லறிவுறுத்தும் வைத்திய லிங்கமே என்
பாக்கிய மன்றோ உந்தன் படிப்பினைப் பின்றொடர்ந்தேன்
ஐக்கமா யுளத்திலூன்றி லொருவனைக் காண்பார்தாமே.

நா. அ. சி. வைத்தியலிங்கம்.



உ

சர்வம் சிவம்

# நால்வர் நான்மணி மாலை



உண்மையுரை

எப்போதகத்து நினைவார்க் கிடரில்லை
கைப்போதகத்தின் கழல்.

(இ—ள்) கை = துதிக்கையினை வாய்ந்த-போதகம் = யானை முகத்தினையுடைய விநாயகர்-கழல் = திருவடியை-அகத்து = இருதயத்து—எப்போதும் = சதா காலத்தும்—நினைவார்க்கு = சிந்திக்கக் கூடியவர்களுக்கு—இடரில்லை = ஜெனன மரண துன்பமில்லை. மனமற்று, உலகு யாவும் அருளாய் விளங்குவர்

(1) பூவான் மலிமணிநீர் பொய்கைக் கரையினியல்
பாவான் மொழிஞானப் பாலுண்டு நாவான்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்த பிரான் தன்னை
வெறித்தவ் கமலமே வீடு.

(இ—ள்) மலி = மிகுந்த—பூ = புட்பங்களும்—மலி = மிகுந்த—மணி = முத்தையுடைய சங்குகளும்-மலி = மிகுந்த—நீர் = நிறைந்த ஜலமுடைய—பொய்கைக் கரையின் = பிர்ம்ம தீர்த்தக்கரையின்—இயல் = இலக்கணம் (எழுத்து)

இசை (இராகம், சீர்) நாடகம் (எழுத்தையும் சீரையும் சேர்த்துப் பாடும் பாட்டு) இது முத்தமிழாலாகிய—பாவான் =பாசுரங்களை—மொழி=சொல்லும்படியான—பால் உண்டு =ஞானப் பாலைச் சாப்பிட்டு—நாவால்=தனது அருள் நாவினால்—மறித்து=திருப்பி—எஞ்செவி யமுதாய்=எம் போன்றவர் செவிக்கு உலகுயாவும் ஞான அருள் அமுதாய் —வார்த்த=தேவாரம் பாடிய—பிரான்=ஞானசம்பந்தன் —தண்டை=சதங்கை (நாபியிடம், சாமவேத அருள் தொனி) வெறி=சர்வம் அருள் சிவமென்ற சமஸ்காரம் (வாசனை) தண்=அருள் ஆனந்த சுகம்—கமலமே=உலகு யாவும் அருள் கமல தாமரையாக அனுபவத்தில் விளங்கு வதே—வீடு=மோட்சம்.

(க—து) உலக தேக சீவன் பூமி சூரியாதிகள் மாயை பொய் தோற்றம், மாயை உடம்பை நான் என்ற புத்தி யுள்ளவர் மூட அஞ்ஞானியே. உலக மாயை நீங்கினது ஞானம். (உலகுயாவும் அருள் வெளியாய் விளங்கினவர் ஞான சம்பந்தர்.) உலகுந்தானும் சிவமாய் விளங்கினவர். "எங்குஞ் சிவமொழிய விரண்டில்லை ஈசன் தன்னாணை" ஆர்த்தவிடமெல்லாம் அருளாயிருக்குதடி, பார்த்த விடமெல் லாம் பரமாகக் கண்டேண்டி" கண்டத்தான மனவிருத் திக்குச் சாட்சி, தொன்பதலட்சியம், ஞான சம்பந்தர்.

(2) வீட்டிற்கு வாயிலெனுந்தொடை சாத்து சொல்வேந்தபொது
வாட்டிற்கு வல்லன் ஒருவற்கு ஞான வமுதுதவி
நாட்டிற்கிலாத குடர்நோய் நினக்கு முன் நல்கினுமென்
பாட்டிற்கு நீயுமவனு மொப்பீ ரெப்படியினுமே

(இ—ள்) சொல்வேந்த = அப்பர் சுவாமிகளே —தொடைசாத்து = உமது தேவாரமானது—வீட்டிற்கு வாயிலென்னும் = மோட்ச வீட்டிற்கு வாசப்படி திறந்து வைத்தது போலிருக்கிறது—பொது = அருள் சபையினிடத்து—ஆட்டிற்கு வல்லன் = உலக தேக சீவன் பூமி சூரியாதி யாவும் அருளாகவே நடனஞ் செய்வதற்கு அருள்வல்லவனாகிய நடராஜன் —முன் = முற் காலத்தில்—ஒருவற்கு = சம்பந்தருக்கு—ஞான அமுது உதவி = ஞானப்பாலைச் சாப்பிடும்படிக் கொடுத்தும்—நாட்டிற்கு இல்லாத = உலகமனிதற்கு இல்லாத—குடர்நோய் = அருள் சஞ்சிதத்தில் ஈரேழு உலகத்தையும் கற்பமாக வைத்திருக்கின்ற அருள் உமையவளாக உலகு யாவும் விளங்கும் படி—நினக்கு நல்கினும் = உனக்குக் கொடுத்தும்—என் = சம்பந்தருக்கு உலகு ஞானப்பாலாகவும், உமக்கு உலகு அருள் வடிவாகவும் கொடுத்தால் உலகில் பேதம் ஏது:—பாட்டிற்கு நீயும் அவனும் ஒப்பீர் எப்படியினும் = நீர் உலகு யாவும் அருள் வடிவமாகப் பாடி (சொல்லி) ஞானமடைந்ததும், அவர் உலகு அருள் பாலாகப் பாடி ஞான மடைந்ததும், உலகு அருள் வடிவம்.

(க—து) ஞான சம்பந்தன், தொன்பதம், கண்டத்தான மனவிருத்தி நேத்திரபுத்தி விருத்தி வாச்சியம். மனவிருத்திக்குச் சாட்சி அறிவு லட்சியம். அப்பர், தற்பதம், நெஞ்சில் மாயை விருத்தி வாச்சியம், மாயை விருத்திக்குச் சாட்சி, அறிவு, லட்சியம். இதுகொண்டு கூட்டு முடிப்பு, தொன்பதம் தற்பதம், மகா வாக்கியப்படி இது சரீரத்தில் சிவத்தின் அநுபவம். குடர் நோய், உடல் நோய், உடல் = அருள்—நோய் = மாயை முதல் இந்திரியம் வரையில் வினைத் தொழில் விளையாட்டு.

3 படியிலா நின்பாட்டி லாரூரநனிவிருப்பன் பரமனென்ப [மன்றித்
தடியனே னறிந்தனன் வான்தொழுமீச நினைத்தடுத்தாட்கொண்டு
தொடியுலாமென்கை மடமாதர்பால் நினைக்காகத் தூதுசென்றும்
மிடியிலாமனைகடொறு மிறந்திட்டுமுழன்றமையால்விளங்குமாறே

(இ—ள்) ஆரூரன் = சுந்தர மூர்த்தியே—படியிலா = ஒப்புஇல்லாத—நின்பாட்டில் = உமது தேவாரத்தில்—நனி விருப்பன் = மிகுந்த பிரியத்தை யுடையவன்—பரமனென்பது அடியனேன் அறிந்தனன் = துரியபரசிவனென்று தெரிந்து கொண்டேன்—வான்தொழு மீசன் = இந்திரியத் தேவர்கள், தொழும்படியான, ஆசிரிய துரியபர சிவன்—நினைத்தடுத்தாள் கொண்டும் = உமது மன இந்திரிய விஷய உலகதேகம் உண்மை என்றே; விஷயம் சுகம் என்ற கலியாணம் ஆகாமல் தடுத்தும்—அன்றி = அது அல்லாமலும்—தொடியுலா = வளையல் விளங்கப் பெற்ற—மென்கை = விஷ

யப்பற்றின்றிய கையினையும்—மடமாதர்பால் = எப்பொழுதும் அருள் இளமை வாய்ந்த பரவை நாச்சியாரிடம்—நினக்காகத் தூது சென்றும்—துரியபர சிவன், தனது அருள் அன்பை, நீர் அடைவதற்கு திரு ஆரூரில் தூது போகியும்—மிடி இலா = துக்கதரித்திர மில்லாத—மனைகள் தோறும் = வீடுகள் தோறும்—இறந்து இட்டு = பிச்சை எடுத்துக் கொடுத்தும்— உழன்றமையால் = இத்யாதி காரியம், உமது பொருட்டு செய்தமையால்—விளங்குமாறு = தெரிந்துகொண்டேன்.

(க—து) சுந்தரம், அசிபதம், நாபித்தானம், அவஸ்தை ஏழில், ஆறாவது துரியம் நாபி அருள் விருத்தி வாச்சியம் துரிய அருள் விருத்திக்குச் சாட்சி அறிவு அசிபதலட்சியம். நாபித்தான துரிய பரசிவன், (ஆசிரியன்). இந்திரியத் தேவரைத்தடுத்தது, விஷய சுக நிச்சயத்தை நீக்கினது. மடமாதர், விஷயமன விருத்தி அல்ப சுகம் இளமை. தரித்திரம் விஷய துக்கமின்றிய அநுபவிகளிடம். இரந்து யிட்டது, விஷய மனம் இறந்து, விஷயம் யாவும் அருளாய் விளங்க வைத்தது. உழன்றது, நீ வேறு நான் வேறு இன்றி, (குரு சிசியனென்பதின்றி) அருளாய் விளங்கினது. யாவுந்தானாய் துரிய அசிபதத்தில் இருக்கச் செய்தமை. தொன்பத சோதனை சம்பந்தர். தற்பத சோதனை அப்பர். அசிபத சோதனை சுந்தரர்.

உலகினை வேறதாக உணர்ந்திடில் பந்தமாகும்
உலகினைத் தானேயாக உணர்ந்திடில் முக்தியாகும்
இலகிடத்தோற்ற லெல்லாம் என்நினைவே யென்றெண்ணி
இலகிடக் கண்டுவேரற்று இருந்தனன் இளமை வேந்தன்.

அகவல்

(4) விளங்கிழை பயின்ற மெய்யுடை முக்கண், காரணனு ரையெனு மாரண மொழியோ, ஆதி சீர் பரவும் வாதவூர் அண்ணல், மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ, யாதோ சிறந்த தென்குவிராயின், வேத மோதின் விழிநீர் பெருக்கி, நெஞ்சநெக்குருகி நிற்பவர்க் காண்கிலேன், திருவாசகமிங் கொருகாலோதின், கருங்கல் மனமுங் கரைந்துகக் கண்கள், தொடுமணற்கேணியிற் சுரந்து நீர் பாய, மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப்பெய்தி, அன்பராகுனரன்றி, மன் பதை யுலகின் மற்றயாரிலரே.

(இ—ள்) பயின்ற = பொருந்திய— இழை = தவஉழைப் பால் உண்டான அருள் ஆபரணங்களால்— விளங்கும் = துரிய அருளாய்விளங்கும் உமாதேவிக்கு— மெய் = உண்மை அருள் சரீரத்தை— முக்கண் = சோமன் (மனம் சந்திரன் கண்டம்) சூரியன் (நேத்திரயிடம் புத்தி) அக்கினி (நாபியி டம் அருள் ஞானக்கினி) மூன்று கண்ணும்— காரணன் = உமையவளுக்கு பூமி சூரியாதி உலக தேகம் யாவையும் தோற்றி ஒடுக்குவதற்கு காரணமாகக் கொடுத்த துரிய பர

சிவன் — உரையெனும் = சொல்லாகிய — ஆரண மொழியோ = வாயினுர்வந்த வேதமோ — ஆதி சீர் = சர்வசிறப்புமுள்ள துரியாதீதத்திலிருந்து, துரிய அருள் விருத்தி — பறவும் = உலகதேக பூமி சூரியாதி சீவனுகவும் தோற்றிவைக்க துரிய அருள் விளங்கும் — வாதவூர் = பிராணன் நாபியினிடம் துரிய அருளிலிருந்து, நாசிகாதி பரியந்தம், மனம் பஞ்ச இந்திரிய பஞ்ச விஷய உலகதேக சீவனுய் வந்து, மீண்டும், துரியநாபியிடம் ஒடுங்கி ஒடுங்கி வரும்படியான வாதவூர் — அண்ணல் = துரிய விருத்தியும் ஒடுங்கும் துரியாதீதம், அதில் மேன்பாட்டினையுடைய, துரிய விருத்தியில் அவதரித்த மாணிக்க வாசகன் — மலர்வாய் = நாபியிடம் அருள் தாமரை (சாமவேதம்) சொரூபியில் — பிறந்த = உலகுயாவும் அருள் வடிவமாய்ச் சொல்லிய — வாசகத் தேனே = திரு வாசகமாகிய அருள் அமுதத்தேனே — யாதோ சிறந்தது = உலக தேக விஷய சீவன், சீவனுக்குக் காரணமாகிய ஈசன். சீவன் ஈசுரன், சகத்தாக மூவிதமாய் விளங்குவதா கிய வேதம், துக்கமாகும். உலகுயாவும் அருளாய் விளங்கு வதாகிய திருவாசகம் சுகமாகும் — என்குவீராயின் = என்று யோசிக்கிறபோது — வேதம் ஓதின் = சீவர்களுக்கு, வேதம் பாடுகிற பிராமணர்களுக்காவது கேட்கிறவர்களுக்காவது — விழிநீர் பெருக்கி = கண்ணில் அன்பு ஜலம் பெருகியும் — நெஞ்சம் நெக்கு உருகி = இருதயமானது ஈசன் அன்பில்

தீயில் அரக்குபோல் உருகி=நிற்பவர் காண்கிலேன்.= இருப்பவரைப் பார்த்தோமில்லை—திருவாசகம்=திருவாச கத்தை—இந்து=இப்பொழுது—ஒருகால்=ஒரு தடவை—ஓதின்=படித்தால்—கருங்கல் மனமும்=துரிய சிவன் அருள் வாசகத்தைப் படித்தவர்கள் கேட்டவர்கள் மனதை அச்சமயம்—கசிந்து உருக=அனல் வெண்ணெய்போல் உருக—தொடுமணற்கேணியில்=தோண்டப்பட்ட மணற் கேணிபோல்—கண்கள் சுரந்துநீர்பாய=கண்ணில்நீர்சுரந்து ஒழுக—மெய் மயிர் பொடிப்ப=சரீரத்தில் ரோமாஞ் சிதங்கொள்ள—விதிர் விதிர்ப்பெய்தி=சரீரம் நடுக்குற்று—அன்பராகுனரன்றி=துரிய அரன்பத்தியில் மேன்மேலும் நினைந்து அன்பு அருள் சந்தோஷமடைவர்களே யல்லாமல்—மன்பதையுலகின் மற்றய ரிலரே=துரியஆசிரியன் அருள் சிவன் அன்பு சந்தோஷத்தில் ஈடுபட்டவர்கள், உலகு யாவும் துரிய அருளாய் விளங்குவர்.

(க—து) மாணிக்க வாசகன், துரியாதீதம், அசிபத லட்சியம். நாபிக்குங் கீழ், துரிய அருள் சிவன் சாமவேதம், அசிபதவாச்சிய முள்ளவர், சாமவேத விருத்தியற்றது, அதர்வண வேத துரியாதீதம். தட்சணாமூர்த்தி, குரு வடிவம். பஞ்சாட்சர ஐக்கிய முடையவர். விழிநீர் பெருக்கி என்பது; மனம் புத்தி, மனசாட்சி தொன்பத லட்சியத்தில் அருளாய்ப் பெருக்கியது. நெஞ்சம் நெக்கு உருகி என்பது

மாயை அகண்டாகார விருத்தியை, மாயை விருத்தி (தற்பத லட்சிய) சாட்சியில் அருளாய் நிற்பவர். சரீரம் ரோமாஞ்சித மென்றது; உலகுயாவும் அருள் ஆனந்தமாய் இருப்பது.

(5) இலைபடர்ந்த பொய்கை இடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்னின்,—நிலைவிளம்பக்
கொங்கை சுரந்த அருட் கோமகனோ சம்பந்தா
இங்குயர்ந்தா வார்சொல் லெனக்கு.

(இ—ள்) இலைபடர்ந்த=நாபி இடம் உலகதேக சீவன் பூமி சூரியாதியாக விரிந்த—பொய்கை=துரிய அருள் பிரகிருதி பிரம்ம தீர்த்தக்—கரையின்=துரியாதீதத்தின்—அழுதல் கண்டு=அருள் அன்பினால் உள்ளங்கரைதலைக் கண்டு—முலைசுரந்த அன்னையோ=உமக்காக கிருபையுள்ள ஆசிரியன், அன்புடன் நூலினுள்ளதை விளக்கிக் கொடுத்த தொன்பத லட்சியமோ—முன் நின் நிலைவிளப்பக்=காரிய உபாதி மன விருத்தி சீவன். தொன்பத மன விருத்திக்கு முன் முன்னே நிலையாயுள்ள மாயை விருத்தி லட்சியங் கேட்க—கொங்கை சுரந்த=தற்பத லட்சியத்தை தான் விவேகமாய் கேட்டானென்று அன்பு மிகுந்த—அருள் கோமகனோ=அருளையுடைய குருநாயனோ—இங்குயர்ந்தா வார் சொல் எனக்கு=நூலாசிரியனு அதை சரீரத்தில் விளக்கிக் கொடுத்த ஞானசிரியனு; உயர்வு.

(க—ரு) சீர்காழி—சீர்-சிறப்பு, கா-துரியவிருத்திதான் கற்பு. (மூலப்பிறகிருதி ஈரேழுலகும் கற்பமாய் வைத்திருக்கிற பார்வதி) அகம்-சாட்சி துரியம். கற்பு, அகம்-கற்பகம். அது துரியவிருத்தி. அழி-ஒடுங்கினதுதான், சீர்காழி ஞான சம்பந்தன். முன்னிலே, பின்னிலே என்பது-காரண உபாதி, காரிய உபாதிமை, சசிவன்ன போதத்தில் நந்தி பாராயனார் சொல்லி இருக்கிறார்.

[றுடையான்

6 எனக்கன்பு நின்பொருட் டெய்தாத தென்கொல் வெள்ளே
றனக்கன்பு செய்திருத்தாண்டக வேந்த வித்தாரணியில்
தினக்கன்பு செய்கின்ற அப்பூதியைச் சிவ நேசமுறும்
இனற்கன்பு செய்கம்பியாரூரனைத் தமிபல்பரிந்தே

(இ—ள்) திருத்தாண்டக வேந்த=திரிதாண்டு-மாயை விருத்தி, மனவிருத்தி, புத்தி இந்திரிய விருத்தி, விஷய கற்பிதத்தில் தாண்டும், மூவிதமாய் செல்லுதற்கு, மாயை விருத்திக்குச் (அகம்) சாட்சியாய் விளங்கும் அரசனே-யாவும் அருளாய்ப் பாடிய அப்பர் சுவாமியே—வெள்ளேறுடையான்=துரிய அருள் வெள்ளியங்கிரியாகிய அருள் ரிஷபத்தில் ஏறி, பஞ்ச இந்திரிய (5) முகத்தோடு, பஞ்ச விஷய உலக பார்வதியை உடையவனுக்கு—நீர் அன்புசெய்ய= உலகுயாவும் சிவமாய் விளங்கும்படி, தேவாரம் பாடிய—இத்தாரணியில்=மூலப்பிறகிருதி அருளில், உலகு யாவும் விதம் விதமாய் பேதாபேதமாய்த் தோன்றிய உலகில்—

அப்பூதியை = அப்பூதி நாயனாரை—சிவநேசமுதலினர்க்கு அன்பு செய் = இந்திரியம் (5) மனம் (1) ஆறிலும் சீவன் பத்தினதால் (60) சத்துவம், இராசதம், தாமதம் குணம் (3) கூடி (63) நாயனாரும் சுந்தரன் சிவன் அருளாய்த் திருத் தொண்டத்தொகை பாடிய—நம்பி ஆரூரன் இயல்பு அறிந் தும் = உலகு யாவும் துரிய அருளாய் நிச்சயப்பட விளங்கி இருந்தும்—எனக்கு அன்புநின் பொருட்டு எய்தாதது என் கொல் = நெஞ்சிலுள்ள மாயை விருத்திக்குச் சாட்சியா கியஉன்னிடத்தில் (தற்பதப்) பிரியம் நீங்கி, அசிபத அரு ளில் அன்பு ஏற்பட்ட காரணம் என்ன.

(க—து) பார்வதி, பஞ்ச விஷயம், பூமி சூரியாதி வரை யில் வந்த அருள் விருத்தி. அப்பூதி, விபட்டி மனம் அப்பு (தண்ணி) சரீரங் குடம். மனம் புத்தி, நேத்திர இந்திரிய அபிமானி சீவன். அறுபத்துமூன்று நாயனார் தற்பத மாயை விருத்தியை, அனுபவி பொய் என்று தள்ளி, யாவும் அரு ளென்ற நிச்சய புத்தியை (63) நாயனார் என்றார்.

7 அறிந்து செல்வமுடையானும் அளகைப்பதியார்தோழமைகொண் டுறழ்ந்த கல்வியுடையானு மொருவன் வேண்டுமென விருந்து துறந்த முனிவர் தொழும் பரவைத்துணைவாரினைத்தோழமைகொ சிறந்த அறிவுவடிவமாய்த் திகழுநுதற்கட் பெருமானே [ண்டான்

(இ—ள்) அறிந்து செல்வமுடையானும் = அருள் பொன் லெட்சுமி செல்வத்தில் மேன்மையுள்ளவன் யார்

என்று தெரிந்து—அளகைப் பதியார் தோழமை கொண்டான்=பொன்னுக்கு அரசனாகிய குபேரனை சிநேகிதஞ் சேர்த்தான்—உயர்ந்த கல்வியுடையானு மொருவன் வேண்டுமென விருந்து=வித்தையாகிய கல்விச்செல்வத்தில் அநுபவியுள்ளவர் யார் என்று அநுபவம் பார்த்து—துறந்த முனிவர் தொழும் பரவைத்துணைவா நினைத்தோழமை கொண்டாய்=உலகமாயை நீங்கிய முனிவர்கள் வணங்கும் படியான, அருளாய் விளங்கிய பரவையை உடையவனே, உன்னைச் சிநேகிதஞ் சேர்ந்தான்.—சிறந்த அறிவுவடிவ மாய்த் திகழு நாதற்கட் பெருமானே=உலகதேகம் பூமி சூரியன் யாவும் துரிய அருள் அறிவாய் விளங்கும் அநுபவ திட ஆசிரியன், திட முமுட்சுவுக்கு, அருள் விளங்க விளக்கும் பொருட்டு, அருள்வடிவ சுந்தரனை ஆசிரிய சங்கஞ் சேர்த்தார்.

அகவல்

(8) பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே
வாசகமதற்கு வாச்சியம்
தாசக வல் குல் வேட்கோளிடத்தவனே.

(இ—ள்) பேர் இன்ப வெள்ளம்=உலகு யாவும் துரிய சிவனது அருள் இன்ப வெள்ளமாய் விளங்கிய பிரம்ம சமுத்திரத்தில்—பெருந்துறை புகுந்து=துரிய அருள்

துறையில், புகுந்து (சிவகலை தோன்றின இடத்தில் ஒடுங்கி) = மூழ்கிய புனிதன் துரியாதீத பிரம்ம வெள்ளத்தில் மூழ்கி வந்த மாணிக்க வாசகன் — மொழிந்த வாசகமே — திருவாசகம் (அருள் வாசகம்) — வாசகமதற்கு = அருள் வாசகத்திற்கு — வாச்சியப் = அருளுக்குப்பொருள் — தூசு அகல் = சுத்தப் பிரம்மத்தில் துரிய அருளாய் விளங்கக் கட்டிய — அல் = அருள் துரியத்தில் உலகுயாவும் அல்லாமலும் — குல் = உலகுயாவுந் தானாகவும் — வேய் = பொருந்திய — தோள் இடத்து = யாவும் அருளாகவே தாங்கப்பெற்ற — அவனே = துரியம், அகமும் புறமும் அருளாய் விளங்கும் உமையவளிடத்துள்ள, துரிய பரசிவன், துரிய வடிவாய் விளங்கும் ஆசிரியனே. அல்குல் என்பது-நாபி துரியஅருள் உமையவளுக்கு — கண்டயிடம் மனம் பாம்பு அல்குல். அதற்குப் படம் பஞ்ச இந்திரியம், படத்தில் பொறி புள்ளி, நேத்திர இந்திரிய விஷய புத்தி, அதன் விஷம், பஞ்ச விஷய இச்சை இதுகள் நாபி உமையவளுக்கு மேல் சொல்லியது, நிதம்பத் தானம்.

(9) இடுகாட்டுன் மாதரெனும்பிற் புறள் மால்
சுடுகாட்டுளாடுவார் சுட்டி-நெடுகாட்டும்
சம்பந்தா, என்பு நின்பால் தந்தாக்கிக் கொண்டிலன்
கும்பந்தா மென்னுமுலைக்கொம்பு.

(இ—ள்) இடுகாட்டுன்மாதர் = நெஞ்சினுள்ள மாயை சக்தி உலகதேக பூமி சூரியாதியை காட்டும்படியான

மாதர் — எனும்பில் புறள்மால் = தற்பக வாச்சிய மாயை விருத்தியில காட்டப்பட்ட எலும்பாகிய உடம்பில் இச்சை யோடு சரீரங்கள் தோறும் உழல்கின்றான் (விஷ்ணு தன் மாயையால் உலகதேகத்தை தோற்றிவைத்து அதில் தானே இச்சைப்பட்டு உழல்கின்றான்) — சுடுகாட்டுள் ஆடுவார் = உலக தேக மாயையை சம்மரித்து ஞான அருளாக்கினியால் சுட்டு, தான்யாவுமாய்த்தனித்து, அருளாகியசிவகாமியோடு நடனஞ் செய்யக்கூடியவனை — சுட்டினொடு காட்டுஞ் சம் பந்தா = உலகதேக சிவனை, உள்ளும் புறமும் அருளாகவே காட்டும், உலகமாயை சம்பந்தம் நீங்கின ஆசிரிய ஞானசம் பந்தா — என்பு நின்பால்தந்து = உலகம்மாயை பொய்என்று வேதாந்த உபநிடதஞ்சொன்ன உண்மை என்னவென்று கேட்டால் — கும்பந்தான் என்னும் = பூரண கும்பம் (சரீ ரம் சரிரி துரிய பரிபூர்ண சிவன்) — முலைக்கொம்பு = அருள் சுகந்தரும்படியான முலையை (அன்பை)யுடைய பெண்ணாக யாவும் அருளாகவே — ஆக்கிக்கொண்டிலன் என் = கேட்டுத் தெரியாமல், சரீரத்தை நான் ஆண் பெண் உயர்வு தாழ்வு சுவாமி சன்யாசி என்று சொல்லுகிறது இது அஞ்ஞான மூடப் பிடிப்பல்லவோ.

(க—து) மாயை உலகத்தை விஷ்ணு தானே காட்டி, உடம்பை ஆண் பெண் என்று தானே இச்சையோடு உழல் கிறான். ஒரு ஒரு சரீரமும் மாயை விஷ்ணுவின் இச்சைக்

கூத்து அறியாமையால். "மாயைக் கூத்தாட வல்லான்" கீதையில் சரீரம் தேகம், சரீரி சீவன், க்ஷேத்திரம் சரீரம், க்ஷேத்திரஞ்ஞன் சீவன். தேகம்-சரீரம் தேகி சீவன். ஒரு ஒரு சரீரமும் அருள் பூங்கொம்பென்றும்;

10 கொள்ளைக்கதிர் முத்தின் பந்தருஞ் சின்னமுங் கொள்ளுமொரு
பிள்ளைக்கது தரும் நாவரசாய பெருந்தகையோய்
கள்ளைக்குவளை யுமிழ்வீழியிற் படிக்கா சொன்று நீ
வள்ளைக்குழையுமை பங்காளர் கையிலேன் வாங்கினையே.

(இ—ள்) கொள்ளைக்கதிர் முத்தின் = அளவு இன்றிய ஞானப்பிரகாசமுடைய முத்து — பந்தரும் = விஷயபந்தமின்றிய மோட்ச அருள் விளக்கப் பந்தரும் = சின்னமுந் = திரு அருள் விளக்கமாகிய பஞ்ச இந்திரிய சின்னங்களும் — கொள்ளுமொரு பிள்ளைக்கு = சத்தாதி (5)ம் அருளாகவே பெற்றுக்கொள்ளத்தரும், விஷயசம்பந்தமின்றி யாவும் ஒன்றாகிய ஞானசம்பந்தம், தொன்பத மனசாட்சி அறிவாகிய பிள்ளைக்கு — அதுதரும் = மனசாட்சி அறிவை விளக்கிக் கொடுக்கத்தரும் — நாவர சாய பெருந்தகையோய் = அருள் வாக்கையுடைய தற்பத மாயை விருத்தி சாட்சி அறிவாகிய அப்பர் சுவாமிகளே — கள்ளைக்குவளை யுமிழ் வீழியில் = நாபியிடம் துரிய பரசிவன் அருள் தேனை நீல உற்பலமாகிய உமையவள் அருளாகிய ஆனந்தத்தேனைப்பொழியும் = படிக்காசுஒன்று நீ = சமட்டி உலகமாயையை தற்பத லட்சியஞ்

செய்யும்படி — வள்ளைக்குழையுமை பங்காளர் கையில் என் வாங்கினையே = சர்வ சம்பத்தை தரும் அருள் சக்தியை யுடைய துரிய பரசிவன் அருள் கையில் அநுபவங்கேட்டு வாங்கினே.

(க—து) திருச்சின்னம் இந்திரியாதிகள். ஊதுகிறது-பஞ்ச விஷயம், அது சத்தாதி தொனிகள். நீல உற்பலம்-உமயவள் நீலி. குழை-அருள் உமையவள். காசு-உலகம் அதில் அபிமானி விஸ்வன், விஸ்வநாதன்.

11 வாங்குசிலை புரையுமுடலெனுங் குளத்தின் மூல மல
மெனுமோர் வெங்கரவின் பகுவாயில் நின்று
தீங்கிலுயிரெனும் பனவக் குலமகனை யாதி
திரோதாயி என்னுமொருவெந்திரள்கூற்றுவனால்
ஓங்குறு நாதாந்தமெனப் பெயரியவக்கரையினுமிழ்
சிவமெனுமோர்தந்தையொடுங் கூட்டாய் [வித்துச்
கோங்கைமுகை கவற்று மிள மூலைப் பரவை பகிழக்
குன்டையூர் தென்மலைமுற் கொண்ட அருள்
[கடலே.

(இ—ள்) வாங்கு = வளைந்த — சிலைபுரையும் = பூதாகாசத்தில் வில்லுதோன்றி மறைவதைப் போலவே — உடல் = சரீரமும் தோன்றி ஒடுங்கும் (அது சிதா காசத்தில் சொற்பனந் தோறுஞ் சூட்சுமம் உலக தேக சீவன் பூமி சூரியாதிகள் புதிதுபுதிதாய்த் தோன்றித்தோன்றி ஒடுங்கும்) — என்னும் = சாக்கிரந்தோறும் தூல உலக தேக சீவன் பூமி

சூரியாதிகள், புதிது புதிதாய்த் தோன்றித்தோன்றி ஒடுங்கும்படியான — குளத்தில் = சரீரமாகிய குளத்தில் நினைப்பு என்கிற தண்ணியில் — மூல மலம் என்னும் ஓர்வெங்கரவின் = சரீரத்தைச் சரீரியானவன், நான் ஆண் பெண், சன்யாசி சுவாமி பிராமணன் என்று சொல்வதே ஆணவ மலம், அளவு இன்றிய இச்சை மிஞ்சினதே காமிய மலம். அகண்ட அருள் வெளியை உலகதேக சீவனுக மறைப்பது மாயை மலம் (3)ல் ஆணவ மலமாகிய முதலை — பகுவாயில் நின்றும் = அளவுகடந்த இச்சையாகிய வாயில் அகப்பட்டு — தீங்கு இல் உயிரென்னும் = குற்றமில்லாத சாட்சி அறிவாகிய — பனவக்குலமகனை = துரிய அறிவாகிய பிராமணப்பிள்ளையை முதலை விழுங்கிவிட — ஆதி திரோதாயி என்னும் ஒரு வெந்திறள் கூற்றுவனுல் = துரிய சீவனை திரோதான சக்தி (ஆவறணசக்தி) என்கிற எமன் முன்னே இருந்து மரித்துக் கொள்ள — ஓங்குரு நாதாந்த மெனப்பெயரிய அக்கரையில் = நாசமின்றி விளங்கும், சத்தம் (வாக்கு) தோன்றி ஒடுங்கும்படியான நினைவுக்கும் சொல்லுக்கும் எட்டாத, நாபியிடம் மாயை நீங்கிய துரிய கரையில் = உமிழ்வித்துச் சிவமெனுமோர் = கக்கிவித்து துரிய பரசிவன் ஒப்பற்ற = தந்தையொடுங் கூட்டாய் = தகப்பனேடு சேர்த்து வைப்பாய் — கோங்கை முகை = கோ, சீவன். கை, இச்சை. சீவ இச்சையை — கவற்றும் = நீக்கும் — இளமுலைப் பரவை மகிழ =

விஷய சந்தோஷம் நீங்கி நாபி அருள் சந்தோஷமாய்—குன்டையூர் நென்மலை முற்கொன்ட அருள் கடலே=திருக்கொன்டையூரில் பெற்ற நெல்லை பூதங்களால் பரவை யிடம் தரும்படிச்செய்த கிருபா சமுத்திரமே.

(க—து) சரீரத்தில் அவஸ்தை (7)ல் ஆருவது நாபி யிடம் அருள் ஆரூர் பரவையிடம். குன்டையூர், மன இந்திரியத்தில், மாயை மேகக் கொன்டலால்விளைந்த சீவனுகிய நெல்லை. நெல்லுக்கு உமி ஆணவமலம். தவிடு காமிய மலம் உள்ள சிவனுகிய நெல்லை தவிடு உமி போகும்படி, வாக்கு இந்திரிய வழியால் கன்டயிடம் மனம், நெஞ்சு இடம் மாயை, நாபியிடம் பரவைத்துரியஅருளில் கொடுக்கும்படிச் செய்த ஞானசாரியனே. கைவல்யம், சிவனுகிய நெல்லை தன்டுலம் (அரிசி) ஆக்கிய குருவே என்ருர். விருத்தாசலம் பெரியநாயகி விருத்தத்தில் சிவப்பிரகாசம், யானுகியநெல்லை பழ மலமாயை தவிடு உமி போக்கி பாகஞ் செய்தென்றருத் திடுவாய்.

அகவல்

(12) கடல்நிறவண்ணன் கண்ணென்றிடர்ந்து, மறை சிலம்பரற்றும் மலரடிக்கனிய, பரிதிகொடுத்த சுருதி நாயகர்க்கு, முடிவிளக்கெறித்துங் கடிமலர்க் கோதை சுரிகுழற் கருங்கண் துணைவியை யளித்தும், அருயகள்

நறும்பூங் கருமயிருதவியுங், கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்தும், அகப்படு மணிமீன் அரற்கென விடுத்தும், பூட்டி அறிவாள் ஊட்டி அறிந்துங், தலே உடை ஒலிக்குஞ் சிலேயிடைமோதியும், மொய்ம்மலற் கோதை கைமலர் துணித்துங், தந்தையைத் தடிந்தும் மைந்தனைக் கொன்றுங், குற்றஞ்செய்த சுற்றங்களைந்தும், பண்டைநாளொரு சிலர் தெண்டராயினர், செங்கண்மால் தடக்கையில் சங்கம் நாண, முட்டாட்டாமரை முறுக்கவிழ் மலர்மேல், வலம்புரி கிடக்கும் வாதவூரன்ப, பாடும் பணிநீ கூடும் பொருட்டு, மதுரை மாநகரில் குதிரிரைமாரியும், விண்புகழ் முடிமிசை மண்புறை சுமந்தும், நீற்றெழுமேனியின் மாற்றடிபட்டும், நின்னைத் தொண்டன் என்னைக்கொண்டனன், இருக்குமடுக்கல் அறக்கனெடுப்ப, முலேபொறவறை பொரு மொய்ம்பின் மலேமகள் தழுவ மனமகிழ்வோனே.

(இ—ள்) கடல்நிறவண்ணன் = சீவர்களுக்கு உலகதேக மாயாசமுத்திரத்தை காட்டும்படியான வளப்பமுடைய விஷ்ணு—கண் ஒன்று இடர்ந்து மறைசிலம்பரற்றும் மலரடிக்கணிய = தற்பத வாச்சியமாயை விருத்தியை, அருள் சாமவேதம் விளங்கும் துரிய பரசிவனுக்குச் சாத்தி—பரிநி கொடுத்த சுருதி நாயகர்க்கு = மாயாசக்கரத்தை விஷ்ணுவுக்கு கொடுத்த சாமவேத அருள்சொரூபனுக்கு—(1) முடி விளக்கெறித்தும் = கணம்புல்லர், மன இந்திரிய விஷயாதி

முடியை, தொன்பத மனதை துரிய அருள் அக்கினியில் எறித்தும்—(2) கடிமலர்க்கோதை சுரிகுழல் கருங்கலு துணை வியையளித்தும்=இயல்பகை, இந்திரிய விஷயத்தில் சீவன் சுழலும் அஞ்ஞானக்கன் இந்திரியத்துக்குத் துணையாகிய மனமென்கிற தனது பெண்சாதியை துரிய பரசிவனுக்கு கொடுத்தும்—(3) அருமகள் நரும்பூங்கருமயிருதவியும்= மானக்கஞ்சாரன், அருமையான தனது மகள் அஞ்ஞான மறைப்பாகிய கறுப்பு மயிரைக் கொடுத்தும்—(4)நெல்முளை வாரி இன்னமுதருத்தியும்=இளையான் குமாரன், தற்பத மாயை விருத்தி வாச்சிய நாத்தங்காலில் சமட்டி சீவ (பிரமா)னுகிய நெல்முளையை வாறி, துரிய சிவனுக்கு அருள் அமுதமாக அருத்தியும்—(5) கோவனநேர்தன்னை நிறுத் துக்கொடுத்தும்=அமர்நீதி, அசிபத அருள் விவேக விருத் திமூலப் பிறகிருதியை துரியாதீதத்தில் நிறுத்துக்கொடுத்தும் —(6) அகப்படுமணிமீன் அரற்கென விடுத்தும்=அதிபத் தன், பிறகு நேத்திர இந்திரியம் முதல்மீன், விஷயத்தில் விருத்தி வந்த போது, உலக தேக சீவன் யாவும் துரிய அருளென்றே விட்டும்—(7) அறிவாள் பூட்டி ஊட்டி அறித்தும்=அறிவாட்டர், கண்ட இடம் மனவிருத்தி ஊட்டியை, உலகு யாவும் அருள் அறிவாகிய அறிவாளை பூட்டி அறித்தும்—(8) உடை ஒலிக்குஞ் சிலையிடைமோதி யும்=திருக்குறிப்பு, சீவனுக்குத் தரிக்கும் அருளாகிய வஸ்

திரத்தில், ஆணவம் காமியம் மாயை என்கிற மல அழுக்குப் பிடித்திருந்ததை, துரியாதீதக் கல்லில் அடித்து (ஆசிரியனால் ஒடுங்கி இருந்து)—(9) மொய்மலர்க்கோதை கைமலர் துணித்தும் = கலிக்கம்பர், இந்திரிய மலரில் சீவ அபிமானி விஷயத்தைப் பிடிக்கும் இச்சையாகிய கையை வெட்டியும் —(10) சண்டேசுரர், தந்தையைத் தடிந்தும் = நாபியிடம் அருளில் பிறந்த சீவாத்மா, அருளுடைய சிவனாகிய தந்தையைத் தடிந்தும், மூலப்பிறகிருதி சஞ்சிதம் அது துரிய விருத்தி அருளை துரியாதீதத்திலொடுக்கியும்—(11) மைந்தனைக்கொன்றும் = சிறுத்தொண்டர் மீண்டும் துரியவிருத்தியில் உண்டான இச்சையாகிய பிள்ளையை, துரிய சிவனுக்கு அறுத்துக்கொடுத்தும்—(12) குற்றஞ்செய்த சுற்றங்களைந் தும் = கோட்புலி, சிவனாகிய நெல்லை சிவனுக்கு வைத்திருந்ததை சப்ட்டிமாயை தசம் (10) இந்திரிய விருத்தி தின்றுவிட, அது தற்பதமாயை விருத்தி, மாயை உலக இச்சையையும், சாட்சி அறிவால் வெட்டி எறிந்தும்—(13) பூக்கொளு மாதர் மூக்கினை யறிந்தும் = சிறுத்துணை, (10) இந்திரிய புட்பத்தை கொள்ளும், காட்டி ஒடுக்கும் மாயை அகண்டாகார விருத்தியாகிய மாதர் பிராணனைக்கொன்றும் (நீக்கி இருந்தும்)–(14) இளமுலைமாதர் வளமை துறந்தும் = நீலகண்டன், அருள் இளமை மாதர் ஈரேழுலகத்தை தோற்றி ஒடுக்கும்படியான வளப்பம், அருள் சந்தோஷம், நாபியிடம் அசிபத

முடைய குபவனுங் குயத்தியும் துரியாதிதத்தில் மூழ்கி அசிபதலட்சியமாய் இருந்து இந்திரிய விஷயத்தில் வந்து எப்போதும் இளமையாய் அருள்வடிவாய் இருந்தனர். துரியாதித மாணிக்கவாசகர்—பண்டைநாளொரு சிலர் தொண்டராயினர் = முற்காலத்தில், யாவுக்கும் முன்னுள்ளது துரியாதிதம், துரியம்ஒன்றான மூலப்பிறகிருதியில் உண்டான சிலர், சிறப்புடையவர் அடியாராயினர், துரியாதிதத்தில் சென்று துரிய அருளாய் விளங்கினர்.—செங்கண்மால் தடக்கையில் சங்கம் நாண = நெஞ்சு தற்பதலட்சியக் கண்ணையுடைய விஷ்ணுவின் சங்கானது, தற்பதலட்சிய பிரம்ம வாக்கிய சத்தத்தை விட மேலானது—முள்தாள் தாமரை முருக்கவிழ் மலர்மேல் = நாபிஅசிபதம் மேன்மையுடைய மூலப்பிறகிருதி, அது தாமறை சாம வேதம், அனேக உலகமுட்கள் தங்கி இருக்கிற துரியாதிதம் அது அசிபதலட்சிய அருள் வாக்கிய சத்தம் மாணிக்க வாசகன் மேலானது, அருள் விருத்தியே ஆனந்தம், முருகு (தேன்) அவிழ்ந்தது அருள் தாமரைமேல்—வலம்புரிகிடக்கும் வாதவூர் அன்ப = கண்டத்தானத்தில் மனம் நேத்திர இடம் புத்தி இது தெற்கு இடம் எமன்திக்கு. நாபியிடம் வடக்கு வலம் துரிய கைலாசம் அசிபத அருள் வாக்கியம் வலம் புரிச்சங்கு மேலானது. அது வாதவூர் பிராணுதிகள் தோன்றி ஒடுங்கும்படியான நாபித்தானம், அது

அசிபத துரிய கைலாசம். அதில் சகச அருளாய் விளங்கிய மாணிக்க வாசக சுவாமிகளே—பாடும் பணி நீ கூடும் பொருட்டு= நீர் உலகு யாவும் அருள் வடிவாக திருவாசகம் பாடி சிவன் அன்பை விரும்பினவர்களுக்கு, உலக தேக சிவன் பூமி சூரியாதி யாவும் அருள் அன்பாய் விளங்கச் செய்யும்படிக்கு—மதுரைமாநகரில் குதிரை மாரியும்= நாபி துரிய மதுரையில் பாண்டியன் (துரியத்தில் இயற்கையுள்ளவன்) பெருமைக்காக, பிராணாதி இந்திரியக் குதிரையின் மேல் பரத (அருள்) நாட்டியத்துடன் (யாவும் அருள்பரன் என்ற நாட்டத்துடன்) வந்து விட்டதும்—வின்புகழ் முடிமிசை மண் புறை சுமந்தும்= இந்திரிய விஷயத்தில் இச்சையானது உதிர்ந்த பிட்டை வாங்கித் தின்றுகொண்டு (இந்திரிய விஷய விருத்தி வணிகப் பெண்ணிடம்) உலகுயாவுந் தோன்றி ஒடுங்கும்படியான வைகையாறு (இந்திரியம் (5) மனம் (1) ஆறும்) விஷயத்தில் ஓடுவதை ஓடாமல் உலக தேக மண்ணைப் பொய் என்று சுமந்து அடைத்தும்—நீற்றெழுமேனியில் மாற்றடிப்பட்டும்= அருள் நீற்றில் தோன்றின, இந்திரியம் (5) மனம்புத்தி (2) எழும், உலகாக விளங்கின மேனியில், மாற்றி அருளில் (7)ம், பொய் என்று மதுரைப்பாண்டியன், துரிய அநுபவ ஆசிரியன் பிறம்பு (அருள் வாக்கியத்தால்) விஷய நிச்சயம் அடிபடவும் (உலக மாயை சத்திய புத்தி நீங்கவும்)—நின்னைத் தொண்ட

னென்னக்கொண்டனன் = உம்மை தனக்கு அடியானுக (துரியாதிதமாகச் செய்தான்.) அடியார்க்கெளியன் பொன்னம்பலவன்—இருக்கும் அடுக்கல் அரக்கனெடுப்ப = அஞ்ஞான ஆங்கார இராவணேசுரன், பத்து இந்திரியத்தலையோடு ஈரேழுலகங்களையும் நாபிதுரியம் மூலப்பிறகிருதியில் அடுக்கி அடக்கி, பரையுஞ் சிவனையுந் தூக்கி பஞ்ச இந்திரிய விஷயத்தில் வரவும், அருள் பார்வதி பஞ்ச விஷயத்தில் அருள் சந்தோடம் நீங்கி தாக்கத்தில் நடுங்கவும்—மூலை பொற வரை பொருமொய்ம்பின் = துரிய அருள் உமையவள் சந்தோஷ பலத்துடன் இந்திரியத்தில்—மலைமகள் தழுவ மனமகிழ்வோனே = இமாசலம் இந்திரிய விஷயம் இமாசலன். விஷயத்தில் இச்சை அவனது புத்திரி பார்வதி (பார் பூமி குரியாதியில் இச்சை) தழுவினது துரிய அருளில் ஒடுங்கினதும், உலகு யாவும் அருளாய்ச் சந்தோஷிக்கிறவனே.

(க—து) திருவாசகம், மறைநான்கே வான் (வான் மனம் மனுகாசம் இந்திரியம் பூதாகாசம்) சரடா தன்னையே கோவணமாய்ச் சாற்றினன் காண் சாழேலோ. நாபியிடம், சாமவேதம் அது கோவணமாக, சீவாத்மாவை துரியாதீதத்தில் சாற்றினுன். ஏதோ இதில் தவரி இருந்தால் என்னிடம் தெரிவித்து, விவேகிகள் திருத்தி சேர்த்துக் கொண்டால் நலமே. அத அர்த்த சாமான்ய விவேகிகளோடு

நான் இருந்தால் இதற்கே பொருளுதவியுடன் விசேஷமாய் அச்சு புத்தக மாக்கவேணுமேயானல் அருள் சத்தி அநுப வத்தில் எழுதுவாள்.

(13) மகிழ்ச்சி மிகவுண்டு போலுமெதிர் வந்து
புகழ்ச்சியொடு நீ பாடும் போது—நெகிழ்ச்சிமலர்ச்
சந்தையினும் வண்டிறையுந் தன்புகலிச் சம்பந்தா
தந்தையினும் பால் கொடுத்த தாய்க்கு

(இ—ள்) சந்தையினும் = சந்தைக் கூட்டம்போல்— வண்டு இறையும் = இந்திரிய வண்டுகள் சத்தகுலாசலம் (சத்தாதிவிஷயம்) பண்ண— தன்புகலிச்சம்பந்தா = அருளா னந்த சம்பந்தா—எதிர்வந்து = அன்பு அருள் அடைய விரும்பின முமூட்சு (மோட்ச இச்சை தீவிரம்) சரீரமாகிய கோயில் தோறும் (பகவத்கீதை சரீரம் க்ஷேத்திரம், சீவன் சரீரி க்ஷேத்திரஞ்ஞன்) சென்று—புகழ்ச்சியோடு நீ பாடும் போது = இந்திரியம் (10) மனம் புத்தி (2) ஆக 12னும் ஆய்ந்து உலகுயாவும் அருளென்று விளங்கினதினுல் பன்னீ ராயிரம் அடியாரோடும், இந்திரிய அருள் முத்துப்பல்லாக் கில், அருள் புகழ்ச்சியோடு நீ பாடும் போது—தந்தையினும் பால் கொடுத்த தாய்க்கு = பரசிவனைக் காட்டினும் (சரீரக் கோயிலில் விளங்குஞ் சிவர்களைக்காட்டினும்) அருள் பால் கொடுத்த ஆசிரியனுகிய தாய்க்கு—மகிழ்ச்சி மிகவுண்டு = உலக விஷயம் மறைந்து அருளானந்தம் அளவின்றி இருக் கும். (க—து) ஆசிரிய சிசியமுறை சொல்லியது.

(14) தாயிலியாகுஞ் சிவபெருமான்றனைத் தானெனுமோர்
கோயிலினுள் அறிவாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலிறுவைவ மாகுங் கபாடமுமன் திறந்து
நோயிலியாகிய சொல்லிறை காட்டுவனோக்குதற்கே.

(இ—ள்) தாயிலியாகுஞ் சிவபெருமான் = தாய் தந்தை இல்லாத சிவாத்மாவாகிய துரிய பரசிவன்—தன்னை = சீவாத்மாவாகிய தன்னை—தான் எனுமோர் = சரீரமேதானென்று பற்றி இருக்கிற—கோயிலில் = கோயிலுக்குள்—ஆர் அறிவாகிய நாமமுன் = பொருந்திய அறிவாகிய பெயர் உள்ள எதார்த்த (சாட்சி) புத்தியாகிய வாசப்படியின் முன்னே—கொண்டிருந்த = சரீரத்தை ஆண் பெண் என்று இருந்த—ஆணவமாகுங் கபாடமும் = ஆணவ மலமாகிய கதவு மூடப்பட்டிருக்க—மன்திறந்து = மீண்டும் சரீரம் நான் என்று சொல்லாதபடிக்கே. ஆன்மாவாகிய சிவத்தை அநுபவமாகவே—நோயிலியாகிய சொல் இறை = இறப்பு பிறப்பு அற்று உலகு தேகம் யாவுந் தானாய் விளங்கும் அப்பர் சுவாமிகளே—நோக்குதற்கு = ஆத்மாவாகிய என்னைத் தெரிந்துக்கொள்ளக் காட்டிக் கொடுப்பாய் என்றார்.

(க—து) உலக சீவர்களுக்கு, உலகதேக சிவ பூமி சூரியாதி மாயை மோகம் நீங்கி யாவுஞ் சிவமாய் விளங்கும்படி அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கம் 4 பேர்களும் மனிதனாக வந்து கோயிலுக்குக் கோயில் பாடினொன்று

முழுமாயையை (பொய்யை) பல பல கல்லே உண்மை சுவாமி கள் என்ற புளுகு புரட்டை உண்மை என்று நம்பின தை சரீரத்தில் வைத்துச்சொன்னது என்று உண்மையை வெளிப்படுத்தினர் சிவப்பிரகாசம்.

(15) நோக்குறுநுதலோன் நின்னிடைவிருப்பால் நூல்பகவு
அன்ன நுன்மருங்குல்
வார்க்குவிமுலே மென் மகளிர்தம் புலவி மாற்றுவான்
சென்றன னென்றால்
கோக்கலிக்காமன் வயிற்றிடைக்குத்திக்கொண்ட
தேதுக்கு நீ புகலாய்
காக்கருமதனே விழுங்கிய முதலேக் கான்றிடத்
தோன்று நாவலனே.

(இ—ள்) நோக்கு=கண்—உறு=பொருந்திய—நுத லோன்=நேத்திர இந்திரிய நாமரூப உலகத்தை, அது மரயைப் பொய்யாகவும், யாவும் அருளாகவே பார்க்கும் ஞானக் கண்ணேயுடைய பரசிவன் (அவஸ்தை 7ல்) ஆறு வது நாபியிடம் துரியம் ஆரூர் தியாக (மாயை பேதம் நீங் கிய) ராஜன்—நின்னிடை=உமதிடத்தில் (சிசியனிடம்)— விருப்பால்=பிரிய அன்பால்—நூல்பகவு அன்ன=உபநிட தம் வேதாந்த சித்தாந்த அநுபவமாய்—நுன்மருங்குல்= மாயை மனம் விஷய புத்திக்கும் எட்டப்படாததாய்— வார்க்குவிமுலே மென்மகளிர்=உலக மாயை சமுத்திரத் திற்கு அகப்படாமல், அகண்ட அருள் சமுத்திர அருள்ப் பாலேயுடைய மாதர்—புலவிமாற்றுவான் சென்றனனென்

ளால் = அருளை மறைக்கும் பஞ்ச புல அஞ்ஞானத்தை நீக்கு வானையானால் — கோக்கலிக்காமன் வயிற்றிடைக் குத்திக் கொண்டது எதுக்கு நீ புகலாய் = அஞ்ஞான மறைப்பால், விஷய இச்சையுள்ள மித்தையா சீவன் வயிர், நாபித்தான துரியத்தில் ஞான அரிவாளால் அஞ்ஞானத்தைக் குத்திக் கொண்டது என்ன காரணம் சொல்வாய்—காக்கருமதளை விழுங்கிய முதலை கான்றிடத் தோன்று நாவலனே = தான் சிவாத்மா என்று காட்டிக்கொடுக்க ஆசிரியன் இன்றியதி னால் ஆணவ மல முதலை விழுங்க, அந்த முதலை சிவாத்மா வாகிய தன்னை மீண்டும் கக்கும்படி செய்த அருள் வாக்கை யுடையவனே.

(க—து) மாயை பொய் உலக தேக சீவன் பூமி சூரி யாதி பேதம் நீக்கி அருள் வெளியை விளக்கி வைத்த ஆசிரிய சிசிய முறையைக் கூறியது.

அகவல்

வலமுழுவுபரிய நல்மலிகங்கை, நதிதலை சேர்ந்த நற் கருணைக்கடல், முகந்துல குவப்பவுகந்த மாணிக்க, வாசக னெனுமொரு மாமழை பொழிந்து, திருவாசகமெனும் பெருநீரொழுகி, ஓதுவார் மனமெனும் ஒன்குளம் புகுந்து, நாவெனு மதகில் நடந்து கேட்போர், செவியெனு மடை யிற் செல்விதிற் செல்லா, உளமெனு நிலம்புக வூன்றிய

அன்பாம், வித்தில் சிவமெனு மென்முளை தோன்றி, வளர்ந்து கருணை மலர்ந்து, விளங்குறு முத்தி மெய்ப்பயன் தருமே.

(இ—ள்) வலமழு உயரிய=உலக மாயையை எரிப்பதற்கு, ஞான அக்கினியை, நாபித்தான துரிய அருளாகிய வலது கையில் முடீட்சுவுக்கு விளங்க வைத்தும்—நலமலி கங்கை நதி=உலக தேகசிவன் பூமி சூரியாதி யாவும் அருள் மயமாய் விளங்கக் கிருபை கங்கா நதியை—தலைசேர்ந்த நற்கருணைக்கடல்=உலக தேகமாய்த் தோன்றும் மாயைக் கடல் நீங்கிய, துரிய பரசிவன் அருள் கருணை சமுத்திரத்தில்—முகந்து உலகு உவப்ப உகந்த மாணிக்க வாசக= துரியாதீத மாணிக்க வாசகன் துரிய அருளை மொண்டு, எம்போன்றவர்கள் அருள் சந்தோஷ மடையும்படி அருள் வாசகம்—எனுமொரு மாமழை பொழிந்து=அருள் வாசகமென்று சொல்லும்படியான பேதமற்ற அருள் மழையைப் பொழிந்து—திருவாசகமெனும் பெருநீரொழுகி=அருள் வாக்கிய அருள் நீரை நூலாக எழுதி-ஓதுவார் மனமெனும் ஒண்குளம் புகுந்து=பிறருக்கு யாவும் அருளாய் விளக்கிக் கொடுக்கக் கூடியவர்களின் மனமென்கிற குளத்தில் புகுந்து —நாவெனு மதகில் நடந்து=வாக்காகிய மதகின் வழியாய் வெளியில் வந்து—கேட்போர் செவியெனும் மடையில் செவ்விதிற்செல்ல=பிரிய அன்போடு கேட்கிறவர்கள்

செவியாகிய வயல் மடையில் திருத்தமாய்ப்பாய்—உள மெனு நிலப்புக=உள்ளமென்கிற நிலத்தில் ஞான அருள் அமுதம் நிரம்ப—ஊன்றிய அன்பாம் வித்தில்=அதில் உண்டான பிரிய அன்பாகிய வித்தில்—சிவமெனும் மென் முளை தோன்றி=உலகுயாவுஞ் சிவமென்கிற முளைமுளைத்து —வளர்ந்து கருணை மலர்ந்து=உலகு யாவுந்தன்னையன்றி வேறில்லை என்று—விளங்குறு முத்தி மெய்ப்பயன் தருமே =மாயை உலகமேக சிவன் பூமி சூரியாதி யாவும் அருளில் பொய்யாய்த்தோன்றி விளங்குகிறது, தான் அகண்டஅருள் வெளி என்கிற அநுபவ மோட்சங் கிடைக்குமென்றார்.

(க—து) பொய்மாயை யுலகில் ஒரு ஒரு சரீரக் கோவில் அருள் பரசிவனைப் விளங்கும் மனிதி மனிதர் வேதாந்தம் படித்த சுவாமி சுவாமிச்சிகளும் கல் செப்பு சுவாமியினிடம் (கல்லை சுவாமியாகவுஞ் செம்பை சுவாமி யாகவுஞ் செய்த, கல் தச்ச தகுதிகளை மோட்சம் வேண்டி அவர்களுக்குச் செய்யாமல்) மோட்சத்தின் பொருட்டு பக்திக்காக ஊருராய்த் திருவிழாக்களுக்குந் தீர்த்தம் முழுக முழுக்குக்கும் போய்ப் பாவத்தைத் தீர்த்துவிட்டால், செய்கிற புண்ணியத்தினலும் தியான செபத்தினலும் பொய் யான சிவனுக்கு, இறந்துபோன பிறகும், சுகந்தேடுகிறார் கள். சுகந்தேடுகிற பொருட்டால் ஊருராய் க்ஷேத்திரங்

தோறும், கல்லில் முட்டுகிறதும், கோவில் குளத்து குப்பித் தண்ணியில் விழுகிறதுமாகவே நாளைக் கழிக்கிறார்கள். இதற்கு வாத்தியார்கள் காவித்துணி உருத்திராட்சத் தாவடங் கட்டின சுவாமிகளே முன் வழி காட்டிகள். அங்கங்கே கல் சுவாமியிடத்திலும், தண்ணித்துறையிலும், பாவத்தை நீக்கி புண்ணியத்தைக் கொடுக்கச் சொல்லுகிற திற்கு, வக்கில் போலவே அய்யர் மார்களும், குருக்கள் மார் களும், தங்கள் பீஸை வாங்கிக் கொண்டு, கோர்ட்டாருக்கு ரிகார்டு பீஸ் போலவே கல் சுவாமிக்கு உண்டியல் பணமும் பூரிதானமுங் கொடுக்கக் சொல்லுகிறார்கள். இது நூல் சாஸ்திர விதி என்கிறார்கள். இது உண்மை விதியோ? தங்கள் மூடத்தனமோ? வயிற்றுப் பிழைப்புப் புளுகோ? இதை யூகித்தறியுங்கள். க்ஷேத்திர மென்றால் சரீரம். க்ஷேத்திரத்தில் சிவன் அல்லது ஈசனென்றால், சரீரத்தி லுள்ள சீவாத்மா அந்தராத்மா, பரமாத்மா இருக்கிறதை, தெரிசினம் பண்ணென்றார், அது பரமாத்மா நானென்று அன்பு பாராட்டுங்கள், அருளை விளக்கி யாவுந்தானாகவே அருளைக் கொடுப்பார் விவேகி. மகாருசா துறவு, உலகினை வேறதாக உணர்ந்திடில் பந்தமாகும், உலகினைத்தானேயாக உணர்ந்திடில் முத்தியாகும், இலகிடத்தோற்ற மெல்லாம் என் நினைவே என்றெண்ணி, இலகிடக்கண்டு வேறற்றிருந்த னன் இளமை வேந்தன்.

(17) பயனுறு நல்லான் பனைக்கும் விடத்திற்கும்
மயிலாகு நோய்க்கு மருந்தா—முயிராகும்
சிந்து மெனும்பிற்குச் சிரபுத்து நாவலன்சம்
பந்த னியம்புந்திருப் பாட்டு,

(இ—ள்) சிரபுரத்து நாவலன் சம்பந்தன் இயம்புந் திருப்பாட்டு=சீர்காழியில் அருள்ஞான சொரூபன் சொல்லிய தேவாரம்—எனும்பிற்கு உயிராகும்=எனும்பாகிய உடம்பை தானென்று சொன்னதை, உடம்புதானல்ல உயிரோடு கூடிய சிவன் தானென்ற நிட்சயமுண்டாகி—நல்லான் பனைக்கு பயனுகும்=அருள் சுகமின்றி, பனை போன்ற சரீரத்தை நானென்ற சரீராதி துக்கம் நீங்கி, அருள் சுகமாகும்–விடத்திற்கு மயிலாகும்=மனப்பாம்புக்கு இச்சையாகிய விஷம், விஷத்திற்கு மயிலாகும், இந்திரியத் தோற்றமே உடம்பு உலகமாகும்–நோய்க்கு மருந்தாம்= சரீர அபிமானத்தோடு, குடும்பாதி நிச்சய புத்தியால் உண்டான துக்கத்தை நீக்கி அருள் சுகமாகும்.

(க—து) என்சான் பனை மரத்திலிருக்கின்ற கள்ளை இறக்கிக் குடிப்பேண்டி கண்ணே.

(18) பாட்டால் மறைபுகழும் பிறை சூடியை பாடி மகிழ்
ஊட்டா மகிழ் சொல் லிறைவனைப் பாடியுவப்புறுக்க
வேட்டான் மலிபெருங்கல்லவன்போலமிதப்பனெனப்
பூட்டா மற்றிரை வார்கடற்கே விழப் போதுவனே.

(இ—ள்) பாட்டால் மறைபுகழும் = சத்த சுரங்களால் 3 வேதங்கள், அதர்வண வேத துரியாதீதத்திலிருந்து பாடும், மாயை உலகதேகம் பூமி சூரியாதி பொய் என்றும், துரியாதீதம் உண்மை என்று புகழும்—பிறை சூடியை = மனம் (1) பஞ்ச இந்திரியம் (1) பஞ்ச விஷயம் (1) மூன்று ஆம் பிறை (3ல் விஷய சுக சந்திரனை) தரித்தவனை— பாடி மகிழ் ஊட்டா = அருளாசிரியனை அருளாகவே பாடி, ஆசிரிய சிசியர் இரண்டற்ற சந்தோஷத்தை ஊட்டி— மகிழ் சொல் இறைவனைப்பாடி = ஆசிரியனால் தான் அருளாகவே விளங்கிக்கொண்ட எனக்கு, அருளை விளக்கி வைத்த அருளப்பனைப் பாடி—உவப்புருக்க வேட்டால் = அருள் அநுபவம் விளங்கிய ஆனந்தத்தோடு—மலிபெருங் கல்லில் = உலகமாயை துக்கத்தில் அழுந்தாமல்—அவன் போல் மிதப்பனென = துரிய அருளை விளக்கிய அப்பனைப் போல துரிய அருளில் இருந்துகொண்டு, உலக மாயையி லழுந்தாமல் மிதப்பனென்று—பூட்டாமறிதிரைவார் கடற்கே விழப்போதுவனே = பந்த இச்சையை மீண்டும் மீண்டும் தரும்படியான அளவு இன்றிய துக்கமாயை சமுத்திரத்தில்; மனம், இந்திரியம், விஷயம் மூன்றிலும் செல்கிறேன்.

(19) போதமுண்டபிள்ளை என்புபொருகன்மாதுசெய்தகோ
காதல்கொண்டுசொல்லின்மன்னன்கல்மிதப்பவுய்த்த
வாய்திறந்து முதலைக்கமகனைநீயழைத்த கோ[தோ
யாது நம்பி யறிந்து நன்றெனக் கியம்பவேண்டுமே.

(இ—ள்) போதம் உண்ட பிள்ளை என்பு பொருகன் மாது செய்ததோ= ஞான சம்பந்தன், எலும்பாகிய சரீ ரத்தை தானல்லவென்று, சிவனுக்கு ஆகாமியம் நீங்கி, தொன்பத மனசாட்சி அறிவாகிய ஞானக்கல், அருள் பெண்ணாகச் செய்ததோ—காதல்கொண்டு சொல்லின் மன் னன் கல்மிதப்ப உய்த்ததோ=சிவனுக்கு தற்பத பிராரத் தம் நீங்கி (மாயை துக்கம் நீங்கி) அருள் துரியக்கல்லில் மிதக்கும்படி அப்பரைச் செய்ததோ—வாய்திறந்து முதலை கக்க மகனை நீ யழைத்ததோ= துரியாதிதத்தில், துரிய ஆங்காரத்தோடு, சஞ்சித அவா நீங்கிய ஞான புத்திரனை, துரிய அருள் பரவை இந்திரிய விஷய சங்கிலியாரோடுங் கூடிய சுந்தரம், நீ அழைத்த அருளோ—யாது நம்பியறிது நன்று எனக்கியம்ப வேண்டுமே=மூன்றில் எ! சுந்தர எது அறிது சொல்வாய்.

(க—து) கண்டம், தொன்பத மனவிருத்தி ஆகாமியம், வியட்டி தூல அஞ்ஞான ஆங்காரம் நீங்கி, தொன்பத சாட்சி அறிவாய் விளங்கினது. நெஞ்சில் தற்பத மாயை அகண்டாகார விருத்தி பிரார்த்தம், சமட்டி தூல அஞ் ஞான ஆங்காரம் நீங்கி தற்பத சாட்சி அறிவாய் விளங் கினது. நாபி அசிபத அருள் விவேக விருத்தி சஞ்சிதம் அகண்ட அருள் வெளி, இது மூல அஞ்ஞானத்தோடு மூல ஆங்காரம் நீங்கி, துரியாதித அருள் வெளியாய் ஆக்கி

வைத்ததோ. இந்தப்படி உபநிடாதி நூல்களில், சாத்திர விசாரமட்டில் போதாது, அநுபவமாய்த் தொன்பத சோதனை செய்ய வேண்டும். அதுவும் போதாது தற்பத சோதனை செய்யவேண்டும். அது சரீரத்தில், மகா வாக்கிய தத்துவ மசிப்படி, மனவிருத்தி கண்டம் (1) அகண்டாகார மாயை விருத்தி நெஞ்சு (1) விவேக அருள் விருத்தி நாபி (1) ஆக மூன்று விருத்தியும் நீங்கி இருக்க வேண்டு மென்றார்.

அகவல்

(20) வேண்டு நின்னடியார் மெய்யன்பெனக்கும், அருள் செய் சிவனே யலந்தேனந்தோ, முறையோ முறை யோ யிறையோனே என்று, அழுது செம்பொன் அம்பலக் கூத்த, னருளாற் பெற்ற அன்பினிலொரு சிறிது, அடிய னேற்கும் அருளல் வேண்டும், நீயோ கோடல் நின்னருள் பெருக்கிற்கு. ஏற்றதன்றிள யேறுகந்தேறியை, பரிமாமிசை வறப் பண்ணிய வித்தக, திருந்திய வேதச் சிறப்பொருள் முழுதும், பெருந்துறையிடத்துப் பெருஞ்சீர், குருந்துரு நிழலில் கொள்ளை கொள்வோயே.

(இ—ள்) வேண்டும் நின் அடியார் மெய் அன்பு எனக் கும்=உன் அடியார் துரிய அருளானது எனக்கும் வேண் டும்—அருள் செய் சிவனே அலேந்தேனந்தோ = உலகுபா

வும் அருள் வடிவாய்க் காட்டிக்கொடுப்பாய், உலக மாயை யில் அகப்பட்டு, சிவாத்மாவாகிய நான், தூக்கத்தில் ஐயோ ஐயோ வென்று விஷயாதியில் அலைகின்றேன்—முறையோ முறையோ இறையோனே என்று=எனக்கு உலகு யாவும் அருள் வடிவமாக விளக்கிக்கொடுக்காமல், நீர் இருப்பது உமது அருள் நிறைவுக்கு முறையோ முறையோ என்று—அழுது செம்பொன் அம்பலக் கூத்தன்=துரிய சபையில் அருள் விளையாட்டையுடையானிடத்தில் (ஆசிரியனிடத்தில்) தொழுது தொழுது—அருளால் பெற்ற அன்பினில் ஒரு சித்து=துரிய பூர்ண அருளைப்பெற்றுக்கொண்ட அன்பினில் ஒருசித்து எனும்—அடியனேற்கும் அருளல் வேண்டும்=உன்னை நம்பின சிசியனாகிய எனக்கும் கொடுக்கவேண்டும்—நீயே கோடல் நின் அருள் பெருக்கிற்கு யேற்றது அன்று=எனக்குக் கொடாமல் நீரே அருள் பூர்ண சுகமடைவது அரனடியான், அநுபவமாய் அருளையுடையவனென்கிற பேர், உமக்குஇன்றியும், அருள் விளக்கமும், இல்லாமல் போய்விடும்—இளயேறு உகந்து ஏறியை=இறப்பு பிறப்பு விருத்தாப்பியமற்ற, பூர்ண அருள் வடிவாயுள்ள, ரிஷபத்தில் விளங்கும் துரிய பரசிவனை—பரிமாமிசை வரப்பண்ணிய வித்தக=சிசியனை துரியத்தில் விருத்தி யொடுங்கி இருந்தும், மனமாகிய குதிரையில், மீண்டும் துரிய அருள் மதுரையில் வரும்படிச்செய்த அருளையுடையவனே—திருந்

திய வேதச் சிறப்பொருள் முழுதும்=நாசமற்ற வேதத்திற்கும் எட்டாத பரசிவன் அருள் முழுதும்—பெருந்துறையிடத்து=அகண்ட துரிய அருளையுடையவனிடத்தில்—பெருஞ்சீர் குருந்துறு நிழலில்=பெரிய சிறப்புடைய, மூலப்பிறகிருதியே, சஞ்சிதமாகிய அருள் துரியம், குருத்த மரம், துரியாதீத அடியில், அருள் விருத்தி ஒடுங்கினது நிழல்—கொள்ளை கொள்வோயே=துரியாதீதத்தில் அமர்ந்தவனே.

(க—து) உலகதேகம் சீவன் பூமி சூரியாதி யாவும், துரிய அருளாய் விளங்கும்படி, அன்புடைய சீவர்களுக்கு விளக்கிக் கொடுப்பாய் என்றார்.

(21) கொள்ளை கொள்ள விடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்
தள்ளுந்திரு ஞானசம்பந்தா—வெள்ளமிடும்
ஏடேறப் பால் குறைந்த தென்றமுவறே கமுவின்
காடேறப் புக்க வருகர்.

(இ—ள்) கொள்ளை கொள்ள விடுதவி=மனம் வாக்கு அற்ற துரிய விட்டைக்காட்டிக் கொடுத்து—கூற்றைப் பிடர் பிடித்து=எமனை பிடரியைப் பிடித்து—தள்ளும்=விஷய உலகதேகத்தை யானெனது என்று சொல்லிய, நிச்சய மனதை நீக்கி சாட்சி அறிவை விளக்கி வைத்த—திரு ஞான சம்பந்தா=துரிய ஞான அகண்ட அருளாய் விளங்கும்ஆசிரியனே=வெள்ளமிடும் ஏடு=துரியாதீத வெள்ளத்தில்இடப்பட்ட அருளோடு—ஏற=உலகுயாவும் அருள் வடி

வாய் விளங்க—பால் குறைந்ததென்றமுவர் கழுவின் காடு எறப்புக்க அருகர்=சமணர் உலகுயாவும் அருள் வடிவ மென்று விளங்காமல், மனதினுல் எல்லா உயிரும், தன் உயிர் போலவே என்று, நிச்சயப் புத்தியாகிய சிவகாருண்யத்தை நினைத்த மனமென்கிற கழுவின், இச்சைக்காடு அற்றுப் போய் விட்டது. அதனுல் பால் குறைந்தது என்று மன எண்ணத்தை விட்டனர்.

(க—து) சமணர், தன்னிச்சயம், மனதினுல் யாவுஞ் சிவனென்று நினைத்த மனம் நீங்கி விட்டது, எல்லாம் அருளென்று விளங்காமலிருந்த சமணர். மனம் இச்சையோடு கருதினதுதான் எமன். கண்டமாகிய பிடரியிலிருக்கிறது. மனமாயையற்ருல் எமனில்லை. சிவனென்பது அற்று, சிவன் சாட்சி அருளாய் விளங்குகிருன். அதனுல் எமனில்லை சரீரம் நான் ஆண் பெண் சுவாமி சன்யாசி பூபதி அமவாசி ரிஷி ரமணரிஷி என்பவர்கள் தன் சரீரத்தை தாயார் பெற்றதாகவும், தாயாரை சமாதி செய்து தனக்கு ஞானத்தின் பொருட்டு பூசையும் பிறர்கள் வணக்கமும் தன்னையும், சமாது செய்ய நிச்சயமுள்ளவர்களுக்கு எமன் உண்டு.

(22) அருகக்கடல் கடந்தேறியதோ சிலேயம்பியெனப்
பெருகக்கடல் கடந்தேறபதோ சொல் பெருமிடறு
கருகக் கடல் விடமுண்டோனடியில் கசிந்துமனம்
உருகக் கடலன்புபெற்ற சொல் வேந்த வுனக்கரிதே.

(இ—ள்) அருகக்கடல் = சமனைக் கூட்டத்தாரை — கடந்து = மனதை விட்டு — ஏறினதோ = நீங்கினதோ — சிலே அப்பி என = உலகதேக விஷய வியட்டி துக்கத்தை மன சாட்சி அருள் அல்லவென்று — பெருகக்கடல் கடந்து ஏறிய தோ = உலகதேக பூமி சூரியாதி யாவும் சமட்டி சீவன் மாயா சமுத்திரத்தை நீங்கியதோ — பெருமிடறு கருக = பெரிய அருள் கண்டம் கருப்பு அடைய — கடல் விஷம் உண்டோன் = உலக மாயையாகிய விஷயத்தை உண்டோன் — அடியில் = துரிய அருள் சிவன் திருவடியில் — கசிந்து மனம் உருக = மனவிருத்தியானது துரிய அருளே நினையுந் தோறும் கசிந்து உருகி — கடலன்புபெற்ற = உலகுயாவும் அருள் வடிவமென்று அன்பாகவே பெற்ற — சொல்வேந்த = அப்பர் சுவாமிகளே — உனக்கு அரிது = தேவரீர்க்கு எது அரிது — சொல் = சொல்வாய்.

(க—து) தொன்பத மன விருத்தியா, தற்பத மாயை விருத்தியா? நீங்கினதில், உனக்கு அரிது எது. நீர் தற்பத மானதால் மனவிருத்தி நீக்கம் சகசம். மாயை விருத்தி நீக்கம் உனக்கு அரிது.

(23) உனக்கரும் புகழ் மேவிய சுந்தரன் உம்பன்மீது இவர
நினைப்பருங்கயிலாய மடைந்தமை நின்றுகாண்குறவே
எனக்குவந்துறுமோ மகவென்று அழுகின்ற நாளலேபால்
தனித்தருந்துபு மாலையுமிழ்ந்திடுந் தம்பிரானலனே

(இ—ள்) உனக்கு அரும்=உன்னுவ (நினைப்ப)தற்கு நினைவுக்கும் அப்பால் பட்ட—புகழ்மேவிய=மேலான கீர்த்திபொருந்திய—சுந்தரன்=அருள் பரவை சுந்தரன்—உம்பன்மீது அருளாகிய வெள்ளை யானையின் மீது—இவர=ஏறிச்செல்ல—நினைப்பறும்=எல்லாம் அற்ற இடம்—கயிலாசம்=துரிய கைலாசத்தில்—அடைந்த=பரசிவனோடு அறிவுப் பிரகாசமாய் இருந்ததை—நின்று காலகுறவே=சரீரத்தோடு இருக்கும்போதே—எனக்கு வந்துறுமோ=உலகுயாவும் அருளறிவாய் விளங்குவதற்கு, ஆசிரியன் அநுபவமாய் அகண்ட அருள் அறிவாகிய தன்னைக் காட்டிக் கொடுக்காமல், அவரவர்கள் நானுணர்ச்சியோடு அறிய முடியுமோ. "குருவன்றியாவற்குங் கூடவொண்ணாதே"—மகவென்று அழுகின்ற நாள்—நான் ஆண் பெண், என் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்கு என்று, கிரம மின்றிய இச்சையோடு, பிறரை துக்கஞ் செய்து வைக்கிறதே, வேலையாயுள்ள காலத்தில்—அலைபால்=அருளாகிய பால் சமுத்திரத்தை—தனித்தருந்துபு=உலகுயாவும் அருள் வெளியாய் தன் சுக சொரூபத்தானுயிருந்து—மாலையுமிழ்ந்திடும்=உலக மாயையில் சுக துக்கத்தைக்காட்டி வைக்கும் மகாவிஷ்ணுவைப் பொய் என்று காரித்துப்பி நீக்கும்—தம்பிரானலனே=உபமன்யரிஷி (அகமும் புறமும்) அருளாகவே பார்க்கிறவரல்லவே நான். உபம் இரண்டு, அகம் உள்ளும் என்று

சொல்வது, சிவாத்மாவை. புறம் வெளியும் என்று சொல்வது மாயை மன தூல சூட்சும சரீரத்தை.

(க—து) ஞான அநுபவ, நூல் சொல்லிவைக்கிற ஆசிரியன். நூலுரை சொல்லிவைக்கிற ஆசிரியன், அதை சரீரத்தில் காட்டிக்கொடுக்கிற ஞானாசிரியன் (3)ல், ஞானாசிரியனால் மேல் சொல்லியதை அநுபவம் விளங்கிக்கொள்ள, உலகில் முமுட்சு (இச்சையுள்ளவர்கள்) க்களில்லையென்று ஞான விளக்க நூலாசிரிய சிவப்பிரகாசன் அது காலம் நினைக்கிறார்.

அகவல்

(24) நலமலிவாதவூர் நல்லிசைப் புலவ, மனநின்றுருக்கும் மதுரவாசகம், கலங்குறு புலநெறி விலங்குறுவிர, திங்கள் வார்சடைத்தெய்வ நாயகன், ஒருகலையேனு முணரான் அஃதான்று, கைகளோமுறிபடுங் கைகள் காணின், கண்களோவொன்று காலையிற்காணும், மாலையிலொன்று வபங்கித்தோன்றும், பழிப்பினென்று விழிப்பினெறியும், ஆயினுங்கன்னை நீ புகழ்ந்துரைக்க, பழுதில் செய்யுள் எழுதினனாதனால், புகழ்ச்சிவிருப்பன் போலும், இகழ்ச்சியறியான்யென்பனிவானே.

(இ—ள்) நலமலி = நன்மை மிகுதியான—வாதவூர் = பிராணன் தோன்றி ஒடுங்கும்படியான ஊர் (துரியாதீதம்)—நல் இசை புலவ = நேத்திர இந்திரிய விஷய உலகதேகத்தை,

சாமவேத அருள் வடிவமாகப் பாடிய மாணிக்கவாசகனே —மனநின்றுருக்கும் மதுர வாசகம்=பாடிய திருவாசக மானது, கேட்கிறவர்கள் மனதில் நின்று, உலகு அருளாக வே உருகவைக்கும்—கலங்குறு புலனெறி விலங்குறுவீர= கண் இந்திரிய விஷய வுலகத்தில் துக்கிப்பதை, விலக்கி யாவும் அருள் வடிவாய் ஆக்கிய வீரனே—திங்கள் வார் சடை=மனமாகிய சந்திரனையும், பஞ்ச விஷயத்தை அறி யும். சப்த, பரிச, ரூப, ரச, கந்த (வாசனை) த்தோடு, ஐந்து விஷய உலகத்தையும் மனசாட்சி அறிவு அறிகிறது என்கிற சடையையும்—தெய்வ நாயகன்=துரிய பரசிவன், விஷய மற்ற அருள் மனமாகிய சந்திரனை, சாட்சி அறிவாகிய சடையிலணிந்தவன்—ஒரு கலையேனுமுணரான்=மனமும் வாக்கும் விஷயங்களை வேறு வேறாகப் பேசுகிறதெல்லாந் தன்னைத்தவிர வேறு இல்லாததினால், ஒன்றையும் விஷய மாய் அறிந்தவனல்ல—அஃதான்று=அதுது அல்லாமலும் —கைகள் காணின்=துரிய பரசிவனுக்கு கைகளைப்பார்த் தால்—முறிபடுங் கைகள்=ஒடிந்து ஒடிந்து உண்டாகக் கூடிய கைகளாக இருக்கிறது—கண்களோ ஒன்று காலையில் காணும்=காலையில் சூரியனாகிய கண், விழித்துத் தோன்றும் —மாலையிலொன்று வயங்கித்தோன்றும்=இராக்காலத்தில் கிரமமின்றி விழித்துத் தோன்றும்—பழிப்பிலொன்று விழிப் பினெறியும்=உலகம் ஒடுக்கவேண்டுமென்ற போது, நெற்

றிக்கன் (ஞானக்கண்) திறந்தால் உலகதேக மெறிந்து போகும்—ஆயினுந்தன்னை = இவ்விதமுள்ள துரிய பர சிவனை—நீ புகழ்ந்துரைத்த = மாணிக்கவாசகனே புகழ்ந்து பாடிய—பழுதில் செய்யுள் எழுதினன் = அருள் வாசகத்தை துரிய வடிவ நடராஜன் விளங்க எழுதினன்—அதனல் = உலகு யாவும் அருளாய் இருப்பதால் தான்—புகழ்ச்சி விருப்பன் போலும் = உலகில் மனிதர் யாவரும் அருள் வடிவமென்று, உலகில் பேதம் நீங்கி விளங்கவேண்டுமென்றே பிரியப் பட்டான்—இகழ்ச்சியறியான் = உலகம் மாயை பொய் என்றே, நிச்சயத்தினல், இகழ்வாகிய உலக பூமி சூரியாதி தேக சீவன் சத்தியமென்றே அறிகிறவனல்ல—என் பணியானே = எனும்பிறுனுள்ள சரீரத்தை, நான் ஆண் பெண் சுவாமி சன்யாசி பாப்பான் பறையனென்று அஞ்ஞான மூடத்தைப் போல நிச்சய புத்தியாய்ச் சொல்ல மாட்டான் யாவுந்தானப் அறிந்த சீவன் முத்த விவேகி.

(க—து) கண்தான் சூரியன் புத்தி. அது சாக்கிற உலக தேகம் வியவகாரிகம். சந்திரன் மனம் சொற்பன உலக தேகம் பிராதி பாசிகம்.

(25) வானும் புகழ் புகலி மன்னன் பொடர் பொன்று
தேனுந் திகழியோன் சீரேடு—தானுங்
கரியாய் மொழியுங் கரியாய் விடாமல்
எரியா ரழல்விழ்ந் தெழுந்து.

(இ—ள்) வானும் புகழ்=தேவர்கள் புகழும்படியான —புகலி மன்னன்=சீர்காழி ஞான சம்பந்தன்—தொடர்பு =தேவார ஏடு—ஒன்று=உலகுயாவும் அருளொன்றே யுள்ளது என்ற—தேறுந்தும்=அருள் தேன் ஏறிக்கிடக் கும்படியான—இதழியோன் சீர் ஏடு=உலகம் தனக்கு, அருளிதழாய் விளங்கும், பரசிவன் சிறப்புப் பொருந்திய ஏடு —தானுங்கரியாய் மொழியும்=தேவாரமானது உலகு யா வுஞ் சாட்சி என்றே சொல்லும்—கரியாய் விடாமல்=உல கம் பொய் என்று, சாம்பராய்ப் போகாமல்—எரி ஆர் அழல் வீழ்ந்தெழுந்து=உலகமோ, இந்திரியம் மனம் அது ஞான அக்கினியாகிய துரிய அனலில் விழுந்து, துரியாதீ தத்தில் ஒடுங்கி—கரியாய் மொழியும்=உலகுயாவுஞ் சாட்சி அருளென்றே சொல்லுகிறது சம்பந்தர் தேவாரம். வாக்கு இந்திரியாதி தேவர்.

(26) தொடைவாழைமேன் மடவாரல்குல் பாம்பு தொடமயங்கி
நடைவாய்ப் பிணைமேனப் பட்டார் பெருகினர் நச்சு குலை
உடைவாழை மேலுரகந் தின்னடமாய்ந்த வொருவனுயி
ரடைவா னருள் புரியுந் திருநாவுக் கரசினையே.

(இ—ள்) தொடைவாழை=மூலப்பிரகிருதி துரிய அரு ளிடத்தில், உலகுயாவுந் தொடுக்கப்பட்ட (தோன்றி ஒடுங் கப்பட்ட) உலக சரீரத்தில்—மேல் மடவார்=மேலே (கண்ட இடம்) மனம் என்கிறப் பெண்—அல்குல் பாம்பு=

உலக விஷயத்தில், கூடாமலும், கூடியும் உள்ள மனமாகிய பாம்பு—தொடமயங்கி=தீண்ட, அறிவாகிய சீவன், அஞ் ஞானத்தில் மயக்கமடைந்து—நடைவாய்ப் பிணமெனப் பட்டார்=நடந்து செல்லுகிறது பிணமே சரீர பிணத்தைத் தான், ஆண் பெண் என்றே, பெயரைப் பெற்றார்கள், பெற் றிருக்கிறார்கள்—பெருகிலர்=அப்பர் சுவாமி அருளைப் பெற் றாரில்லை (தற்பதலட்சியமாகிய அருளை விளங்கிக்கொள்ள வில்லை)—நச்சுக்கொலை=நச்சு விஷம், கொலை துக்கம். விஷம் போல் துக்கத்தை தரும்—உடைவாளைமேல்=மூலப்பிற கிருதி, அருள் துரிய வாழ்க்கைக்கு, மேல் உள்ள—உரகந் தீண்ட=மனமென்கிற பாம்பு, அறிவாகிய சீவனைக் கடிக்க —மாய்ந்த ஒருவன்=அப்பர் சுவாமி அருளினால், அப்பூதி நாயனார் பிள்ளை, இறந்து போனவன்—உயிரடைவான்= சரீரத்தை நான் ஆண் பெண் சுவாமி சன்யாசி பிராமண ரென்பது நீங்கி, நான் சாட்சி அருளாகிய சீவாத்மாவென்று உயிர்பெற்றெழும்படிச் செய்து—அருள் புரிரியுந் திருநாவுக் கரசினையே=உலகுயாவும் அருள் வடிவாய் விளங்க வைத்த அப்பர் சுவாமியே.

(க—று) நெஞ்சில் தற்பத லட்சியமானாலும் நாபியில் அசிபத மூலப்பிறகிருதியில் அசிபத லட்சியமாகவேணும். ஸியட்டி மன விருத்தி அபிமானி அப்பூதி. விடிய இச்சை அவர் பிள்ளை. ஸியட்டிமன விருத்தி அவர் பெண்சாதி.

(27) அரசன் பரிமேல் வரநெடுநல் யானையெருத்தத் தமர்ந்து போய்
வரதன் கயிலை மலையடைந்த மணியே மணிநீரிடுபசும்பொன்
திரைசங்கெறியும் குளத்துவரச் செங்கல் செம்பொன்னுப்பாடும்
பரிசின்றெனக்குன் செம்பவளத் திருவாய் மலர்ந்து பகர்வாயே.

(இ—ள்) அரசன் = சேரமான் பெருமான்—பரிமேல் வர = மனமாகிய குதிரைமேல் வர—நெடுநல்யானை = வாக்கு மனதிற்குமெட்டாத அகண்ட அருளாகிய யானை—எருத்தத்து = முதுகில்—அமர்ந்துபோய் = எதிர்செல்ல—வரதன் = ஈரேழு உலகத்தையும் ரட்சிக்கிற தன் அருள் சத்தியையுடைய வரதன் (துரியபரசிவன்)—கயிலை மலையடைந்த = துரிய கயிலாசத்தில் சேர்ந்த—மணியே = ஞான சொரூப ஞான மணியே—மணி நீரிடுபசும்பொன் = விருத்தாசலம், துரியாதிதம், திருமணி (ஞானமணி) நீர், துரிய அருள் கெங்கையில் போடப்பட்ட (துரியாதீதத்தில் சென்று) துரிய அருள் பொன்னைத்து—திரைசங்கெறியுங் குளத்துவர = உலக விஷய சுகதுக்கமுங், கால தேசங்களையும், மாறிமாறிக் காட்டும்படியான அவஸ்தை எழில் ஆறுவது துரிய அவஸ்தை திரு ஆரூர் துரிய குளத்தில் வரும்படிச்செய்தும்—செங்கல் = மனம் துக்கமாகிய கருங்கல், துக்கமற்ற (மனம் அற்ற) துரியச் செங்கல்—செம்பொன்னுப்பாடும் = துரிய அருளை பொன்னாக துரிய கயிலாசம் உலகுயாவும் அருள் கயிலாய மலையாகவே பாடும்—பரிசு

= தன்மை—இன்று = இப்பொழுது—எனக்கு = என்றனக்கு —உன் = உமது—செம்பவள = ஆசிரியன் அருள்வடிவாய் என்பொருட்டு ஞான அநுபவம், விளங்கி வந்த = திருவாய் மலர்ந்து = உமது உள்ளத்தில் என் பேரில் அருளன்பு ஏற்பட்டு, நான் அருள் சாட்சி துரியத்தில் ஞான அனுபவமாய்ச் செல்லும்படி—பகர்வாய் = எனக்கு அநுக்கிரகமாகிய அருள் புரிவாய் என்றார்.

(க—து) சமட்டி மனமாயை அபிமானியே சேரமான் பெருமான்.

அகவல்

(28) பகிர்மதிதவழும் பவளவார் சடையோன், பேரருள் பெற்றும் பெறாரினமுங்கி, நெஞ்சநெக்குருகி நிற்பை நீயே பேயேன்பெறுது பெற்றார்போலக், களிகூர்ந்துள்ளக் கவலை தீர்ந்தேனே, யன்னமாடும் அகன்றுறைப் பொய்கை, வாதவூரன்ப ஆதலாலே, தெய்வப்புலமை திருவள்ளுவனார், நன்றறிவாரிற் கயவர் திருவுடையார், நெஞ்சத்தவல மிலரெனுஞ்செஞ் சொற் பொருளின்தேற்றறிந்தேனே.

(இ—ள்) பகிர்மதிதவழும் = மூன்றாம்பிறை, மனம் (1) இந்திரியம் (1) இந்திரிய விஷயம் (1) விஷயம் வரையில் மூணிலும் வந்த விருத்தி, துரிய சுகவிருத்தி, அருள் சுக சந்திரன் விளங்கியும்—பவள வார்சடையோன் = நிருத்தமான

கண்ட (அகண்ட) சாட்சி அறிவாகிய சடையையுடைய பரசிவன்—பேரருள் பெற்றும்= பெரிய இயற்கையாய் அருளைப்பெற்று இருந்தும்—பெறாரினழுங்கி= அருளைப்பெறாதவர் போலத்துக்கப்பட்டு—நெஞ்சநெக்குருகி= இருதயமானது வெண்ணெய்போலுருகி—நிற்பை நீயே= துரிய பரசிவனிடத்தில், இருதயமாகிய நெஞ்சில், சிவனாகிய நீர், தனித்து நிற்பாய்—பேயேன் பெறாது= சீவனாகிய நான், மனமாகிய பிசாசோடு கூடி (5) இந்திரியத்தில், உலக தேக குடும்பாதிகள், சத்தியமென்றே, பரசிவன் (ஆசிரியன்) அருளைப் பெறாமல், விஷயத்தில் அலைகின்றேன்—பெற்றார் போல= துரிய பரசிவன் (துரிய அநுபவ ஆசிரியனது) அருளைப்பெற்றவர்கள் போலவே—களிகூர்ந்துள்ளக் கவலை தீர்ந்தேனே= மனிதர் முதல் மிருகாதி வரையிலுள்ள, பிறவித்துன்பம் வாட்டுமே என்கிற எண்ணமிருந்தும், அதில் அருவருப்பில்லாமல் மாயை குடும்ப விஷயத்திலேயே, மூடனாகக் களித்திருக்கின்றேன். இது என்ன அறியாமையாகிய மூடமோ தெரிந்தேனில்லை—அன்னமாடும்= அகண்டஅருளாகிய தன்னையறிந்து, அருள் கெங்கையிலேயே, அருள் விளையாட்டை ஆனந்தத்தோடு ஆடும்—அகல்துறை பொய்கை= அகண்ட அருள் கடலாகிய அதில் யாவரும் வந்து அடையும்படியான கெங்கையில்—வாதவூர் அன்ப= மனம் பிராணனோடும் அருளாகவே பிறந்து வந்த மாணிக்க

வாசக—தெய்வப்புலமை=பஞ்ச இந்திரியம், அதின் பஞ்ச விஷயம் அது உலக தேக சீவன் பூமி சூரியன் யாவும், பர சிவன் அருள் வடிவாய் விளங்கிய—திருவள்ளுவனார்= ஞான வெட்டியான்—நன்று அறிவார் இல்=அருளை அறிய (தெரிந்துகொள்ள) இல்லார் (விவேகமில்லாதவர்)—கயவர் =மூடர்களும்—திருவுடையார்=மூடத்தன தைரிய முள்ள வர் (மாயை பொய் உலகதேக பூமி சூரியன் யாவையினும், விரதம் தீர்த்தம் சுவாமி தெரிசனத்திலும், சத்திய புத்தி விவகாரத் தைரிய குசலர்)—நெஞ்சத்து அவலம் இலர் என்னும்=இருதயத்தில் அனந்த ஜென்ம துக்கம் இருக்கி றதே. இதுகளினால் திருமோ என்று யூகித்து யூகித்து விசார மில்லாத அஞ்ஞான தைரியர் என்று—செஞ்சொற் பொரு ளின் தேற்றரிந்தேனே=அருள் விவேக நூல் பொருளின் (வள்ளுவர் நூலினாலும்) தெளிவாகத் தெரிந்துகொண்டேன்.

(க—து) பிறப்பு இறப்பு இருக்கிறது என்றும், இல்லை என்றுந் தெரியாமலிருக்கின்றார்கள்.

(29) தேனேறலர் சூடிச் சில்பலிக்கென்றார் திரியும்
ஆனேறியாண்டுப் பெற்றான்கொல் நீ—தானேறும்
வெள்ளைமணியொன்று விணுவுவோம் வாங்கியவப்
பிள்ளையை யாங்காணப் பெறின்.

(இ—ள்) தேன் ஏர் அலர் சூடி=உலகு யாவும் அரு ளாய் விளங்கும் ஆனந்தத் தேனாகிய அருள் மலரைச்சூட்டி

—சில்பலிக்கென்று=அல்ப உலக விஷய சுகத்திற்கு—ஊர் திரியும்—பிறரை துன்பப்படுத்தும்—ஆன்யேறி=மனிதி மனிதசிவர்கள்யாவரும், துரிய அருள் ரிஷபவாகனத்திலேறி உலக பஞ்ச இந்திரிய விஷய, சரீரத்தோடு வந்த பரசிவன் —யாண்டுப்பெற்றான்=எவ்விடத்தில் எந்த ஆசிரியனிடம் அருளைப் பெற்றான்—சொல்=சொல்லுவாய் என்று—நீ தான் ஏறும் வெள்ளை மனி என்று வினவுவோம்=அகண்ட அருள் அன்பை, எனக்கு விளங்கக் காட்டிக்கொடுப்பாய் என்று கேட்பேன்—வாங்கிய அப்பிள்ளையை யான் காணப் பெறின்=அருள் முத்துப் பல்லாக்கை, பெற்றுக்கொண்ட அருளையுடைய ஞான சம்பந்தனை இப்போது, நான் கண்டால் ஞான அனுபவம் விளங்கிக்கொள்வோ மென்றார்.

(க—து) உலக மாயை நீங்கிய அருள் வடிவாயுள்ள பிரம்ம அறிவு வெளியையும், தொன்பத, தற்பத, அசிபதம் 3ம் சரீரத்தில் நூலில் சொல்லியதை படித்து பாட அர்த்தங் கேட்டவர்கள், கேட்டபடி காட்டிக்கொடு என்று உலகில் கேட்கவில்லை என்றார்.

[பிறப்பதுன்டேல்

(30) பெற்றால் நினைப்பெற்றவர்போல் பெறலும்
நற்றாரணியில் நினைப்போல் பிறப்பது நல்ல கண்டாய்
செற்றார்புறமெரி செய்த வில்வீரன் திருப்பெயரே
பற்றுமதிவெண் டிறைகடல் நீந்திய பாவலனே.

(இ—ள்) பெற்றால் நின்னைப்பெற்றவர் போல் பெறலும் = உன்னை சிசியனாகப் பெற்ற ஆசிரியனைப்போல் பருவபக்குவம் பார்த்து பெறவேண்டும்—பிறப்பதுண்டேல் = அருளோடு கூடிய சிசியனாக வேண்டுமேயானால்—தற்றாரணியில் = மிருகவுலகம் மிருக சரீரம் நீங்கி, மனிதவுலகத்தில்--நினைப்போல்பிறப்பது நல்லகண்டாய் = உன்னைப்போல் அருள் வடிவாய்உள்ள சிசியனாகப்பிறந்தால், உலகத்தில், அருளையடைய விரும்பினவர்களுக்கு நன்மையாகும்—செற்றார்புறம் = சாக்கிரம் தூல உலக தேகம். சொற்பனம் சூட்சும உலகதேகம், கனவு இன்றி தூங்குகிறபோது, உலக தேகம் சிவன் பூமி சூரியாதி யாவும் ஒடுங்கி, சுத்த சூன்ய அறிவு வெளியாய் இருக்கிறது என்று, சாக்கிரத்தில் விளங்கிக்கொள்ளாமல், இருப்பதேதான் காரண சரீரம். அதுதான் அவ்வியத்தம், அருள் சத்தி, அருள் வெளியென்று கைவல்ய முதலியது சொல்லும். சாக்கிரம், சொற்பனம் சுழித்தி மூணில், தூல சரீர அபிமானிகள், சூட்சும சரீர அபிமானிகள், காரண சரீர அபிமானிகள், மூணு சரீர கர்த்தாக்கள்தான், முப்புர வாசிகள். அகண்ட அருளாகிய சிவனை அந்தந்த உலகத்தோடு வந்து துன்பப்படுத்த—எரி செய்த = குருவாகிய துரியபரசிவன், மூன்று சரீர உலகமாயை பொய் என்று, சரீர அபிமானியாகிய அரக்கனைக் கொன்று, உலகு யாவும் அருள் வடிவ ஞான சொரூபமென்று, அநுபவம் விளங்கிய

ஞான அக்கினியால் எரித்து அநுக்கிரகஞ் செய்த—வில் வீரன்=அருள் ஞான வில்லைத்தாங்கிய வீரண் (குரு)—திருப்பெயரே பற்றாக=அருள் வடிவமாக, உலக தேகாதி யாவும் விளங்கும்படி காட்டிக்கொடுத்த, ஆசிரியன் அருள் வடிவத்தைப் பற்றிக்கொண்டு—மறிவெண் திறைகடல்= உலக தேகாதிகள், சாக்கிரத்திற்குச் சாக்கிரம், சொற்பனத் திற்குச் சொற்பனம், அழிந்து அழிந்து புதிது புதிதாய் உலகதேக பூமி சூரியாதி சீவன் உண்டாகும்படியான, உலக மாயா சமுத்திர அலைகள் வீச—நீந்திய பாவலனே=உலகு யாவும் அருள் வடிவாய் அருளில் மிதந்து, அருள் வடிவாய்ப் பாடிய, வல்லமையுள்ள ஆசிரியனே என்றார்.

(க—து) ஆசிரியனே முப்புரம் எரித்த பரசிவனே என்றார்.

(31) பாவாய்ப் பொழிந்த வானமுதப் பவளத்திருவாய் நம்பி நீ
சேவாய் பொருதுந்தரும முடைத்தேவன் மலைக்கு போம்பொழுது
காவாய்ப்பயந்த தடக்கைமலற் கழறிற்றவார் கடாவிவரும்
மாவாய்ப் பிறக்கக்கிடையாதே மாவாய்ப் பிறக்குந் திருமாற்கே.

(இ—ள்) வான் அமுதம்=துரியாதீத சிதாகாசத்தி னுள்ள அருள் அமுதத்தை—பாவாய்ப் பொழிந்த=தேவாரம் பாடிய-பவளத்திருவாய்=அருள் பிரகாசத்தைச் சொல்லிய வாக்கையுடைய—நம்பி=உலகு யாவும் அருள் வடிவாய் நம்பி இருந்த, சுந்தர மூர்த்தியே—நீ=நீர்—சேவாய் =துரிய அறிவாய்—பொருதும்=விளங்கும்—தருமமுடைத்

தேவன் = அருள் தருமமுடைய பரசிவன்—மலைக்கு = துரிய கயிலாசத்திற்கு—போம்பொழுது = போகுஞ் சமயம்—காவாய்ப்பயந்த தடக்கைமலர் = கற்பகத்தருவைப் போல, அகண்ட அருளாகிய கையையும்—கழறிற்று = உலக சீவ சத்தமெல்லாம்—அறிவார் = அருள் சத்தி உமையவள் சத்த மென்று தெரியக்கூடிய சேரமான் பெருமான் பெருமா நாயனர்—கடாவிவரும் = ஆசிரியனல் மனசாட்சியில் மன விருத்தி குதிரையில், சமட்டி மன அபிமானி சேரமான் பெருமான், துரிய கயிலாசத்தில் செல்லும்—மாவாய்ப்பிறக் கக்கிடையாதே = ஆசிரியனல் உலகு யாவும் அருவாய் விளங்கத் தெரிந்துகொண்டு, பிறகு அருளில் சென்று, உலக சத்தம் யாவும் சாட்சி துரியாதீத அறிவு வெளியில், விவேக அருள் சத்தி சத்திக்கிறதென்று விளங்கிக்கொள்ளக் கிடைக் குமோ—இனி மாவாய்ப் பிறக்குந்திருமாற்கே = இனி குதி ரையாய், பிறக்கக்கூடிய விஷ்ணுவுக்கு அருள் துரிய கைலா சம் கிடைக்காது.

(க—து) நாம் அருள் சிவமென்று, நானுண்மை போதிக்கிற ஆசிரியரைக்கூடி விசார திட புத்தியோடு, அருள் சிவத்தையே சிந்திக்கிற தவத்தை யுடையவர்கள், கிரேதா யூக இச்சையுள்ளவர்கள் மறுமையில் பரமன் பத மடைவர். நாம் சிவனென்கிற திட புத்தியோடு, நான்

சிவன் சுகமடையவேணுமென்று, உலக தேக சிருஷ்டி செய்கிற பிரமாதியர்களை சிந்திக்கிற தவத்தை யுடையவர்கள், திரேதாயுக இச்சையுள்ளவர்கள், மறுமையில் பிரமாதியர் பதமடைவர். நாம் சிவனென்கிற திட புத்தியோடு நாம் சிவன் தேவபோகாதி சுகமடைய வேணுமென்று, தேவர்களை சிந்திக்கிற தவத்தை யுடையவர்கள், துவாபர யூக இச்சையுள்ளவர்கள், மறுமையில் தேவ போக பதமடைவார்கள். என்னைத் தாய் தகப்பன் பெற்றதென்றும், எனது பெண்சாதி பிள்ளை என்றும், சரீரத்தை ஆண் பெண் பிராமணன், சுவாமி சன்யாசி, அமரை ரிஷி, ரமரை ரிஷி, பூபதி என்றும், ஆணவ மல கோபதாபத்தோடு, சிவன் நான் என்கிற நிச்சய புத்தி இல்லாமலே, சரீரமே நான் என்கிற மூடபேத புத்தியோடு இருப்பதுதான், மாவாய்ப் பிறக்குந் திருமாறுக்கென்றார். சாட்சி அறிவு விஷ்ணு மனதோடு கூடிய சிவனுப், மனமென்கிற குதிரையாய், இச்சை என்கிற கலியுக முடிவாகிய மூடத்தோடு, சரீர அபிமானியாய்ப் பிறக்கிறவர்கள் தினந்தோறுஞ் சரீரத்தை நான் என்கிற திட புத்தியுள்ளவர்கள்) அவர்களுக்கு, உலகுபாவும் அருள் சிவமென்றே தனக்கு விளக்கிக் கொடுக்கும்படியான அநுபவ ஞானசிரியன் கிடைக்காது, இவர்களுக்கு இப்பவே மிருக புத்தியேதான் மிகுதியாய் இருக்கிறது. மறுமையில் மிருக புத்தியாகவோ மிருகமாகவோ

பிறப்பார் என்றார். கலி (இச்சை) யூக அந்தத்தில் குதிரை யாய்ப் பிறப்பர். மேல் சொல்லியதுகள் பிராதிபாசிகம்.

அகவல்

(32) திருவார் பெருந்துறைச் செழுமலற் குருந்தின், கீழல்வா யுண்ட நிகரிலானந்தக், தேன்றேக்கெரியுஞ் செய்ய மாணிக்க, வாசகன் புகன்ற மதுரவாசகம், யாவரு மோது மியற்கைத்தாதலின், பொற்கல நிகற்கும் பூசுரர், நான்மறை, மட்கல நிகர்க்கும் மதுரவாசகம், ஓதின் முத்தி யுறு பபன், வேதமோதின் மெய்ப்பயன் அறமே.

(இ—ள்) திருவார் பெருந்துறை = அழகிய அருள் விலாச முள்ள துறையில் — செழுமலர்க்குருந்தின் = மூலப் பிற கிருதி, அருள் புட்பிக்கும்படியான குருந்தின் — நிழல் வாயுண்ட = அருள் ஒடுங்கும்படியான துரியாதீதத்தில், அருள் முழுமையும் சாப்பிட்ட — நிகரிலானந்த = வாக்கு மனதிற்கும் எட்டாத — தேன்தேக்கி = அருள் ஆனந்தம் தேக்கி — எறியுஞ் செய்யமாணிக்க = அரன் அருளைப்பாடும் படியான அருள் வடிவாய் விளங்கும் மாணிக்க — வாசகன் புகன்ற மதுரவாசகம் = அருள் துரிய வாக்கால் சொல்லிய திருவாசகம் — யாவரும் ஓதும் இயற்கைத்து = யாவரும் படித்து அன்பு அருளை அடையும்படியான இயற்கையுள் ளது — ஆதலின் = அதனால் — பொற்கல நிகர்க்கும் = பொற்

பாத்திரத்தை ஒத்தது—பூசுரர் நான்மறை=பிராமணர்கள் ஓதுகிற வேதமானது—மட்கல நிகர்க்கும்=மண்பாத்திரத்தை ஒத்தது—மதுர வாசகம்ஓதின் = திருவாசகத்தை அறிந்தவர்களோடு படித்தால்—முத்தியுறுபயன் = படித்த பிரயோசனம் முத்தி அடைவர்—வேதம்ஓதின் = வேதந்தெரிந்தவர்களோடு படித்தால்—மெய்ப்பயன் அறமே=சரீர புண்ணியந்தான், அது சாப்பாடும் பணமுங்கிடைக்கும், முத்தி மோட்சமில்லை.

(க—து) திருவாசகம், மோட்சத்தைச் சொல்லும், மோட்ச மின்னதென்று விளங்கி, பேதமின்றிய பரசிவனையே யடைவர் அடைந்திருப்பர். வேதம் பேதமாகவே காட்டி, பேதமே திடப்படுத்தும். பேதபுத்தியே பந்தம். பரசிவனது அபேதமேமுத்தி, போலிவேதப் பிராமணர்களுக்கில்லை. போலி என்பது சரீரத்தை உயர்வு தாழ்வு பார்ப்பது.

(33) அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொருத்தானோ டூர்ந்தா னிடை—மறுத்தார்
சம்பந்தன் சிவிகை பரித்தார் மற்
றுந்துஞ் சிவிகையினை யூர்ந்து.

(இ—ள்) அறத்தார் இதுவென=புண்ணியவான் இன்னார் என்று யூகிக்க—வேண்டாம்=பார்க்கவேண்டாம்—சிவிகை பொருத்தானோடு ஊர்ந்தான்=பல்லாக்கு தூக்குகிறவன் பாவி, ஏறிச்செல்கிறவன் புண்யவான் என்று, திரு

வள்ளுவர் சொன்னதாக உரை சொல்லுகிருர்கள். அவர் கருத்தன்று—இடையில் ழுறுத்தார்=அந்த உரையை மறுத்தார்—சம்பந்தன்=ஞான சம்பந்தன்—சிவிகை=பல்லாக்கை—பரித்தார்=தூக்குகிறவர்—திரிகுவர்=துக்கம் அற்று அருள் ஆனந்தமாய்த் திரிகுவர்—மற்று=அசை—உந்துஞ் சிவிகையினையூர்ந்து=ஞான சம்பந்தன் அருள் முத்துப் பல்லாக்கைப் பற்றிக்கொண்டு உலகு ஆனந்த மயமாய்த் திரிகுவர்.

(க—து) அறிஞருக்கு உலகு ஆனந்தமயம். சரீரம்' இந்திரியத்தினுல் கட்டப்பட்ட சரீர பல்லாக்கை, அறியாமையுடைய மூடர்கள் துக்கத்தோடு தூக்கி சுமப்பர். ஞான சம்பந்த ஞானசிரியனுல், அருளை விளங்கிக் கொண்டவர்கள் உடம்போடு, உலகுயாவும், அருளானந்தமாகவே களித்திருப்பர். உலகு சீவன் பொய் மாயை, அதில் பாவ புண்ணியமென்று திருவள்ளுவர் சொன்னதாய் உரை சொல்லுகிருர்கள். குறள் வேதம். வேதமானது ஞான சாஸ்திரம் அது பேதஞ் சொல்லமாட்டாது, யாவும் பிர்மமென்றே கூறும்.

(34) ஊர்ந்து வருமிள வேறுடையான்றனுளத்தருளால்
சார்ந்துசமண் விட்டுறுமுனக்கே வருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரும் நாவரசே நல்குறவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க்கேசிறந்தோங்குருஞ்செல்வமுமே

(இ—ள்) வளர்ந்து வரும் இள ஏறு உடையான் = சர்வ சாட்சி அருள் வெளியிலிருந்து அது (கண்ணை மூடி தூங்கினபோது துரிய வெளி) அதிலிருந்தே, அருளாகவே விளங்கி, கண் விழித்த போதும், கனவு கண்டிருந்தபோதும் உலகதேக சிவன் பூமி சூரியாதி மாயை, தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும், இடமாயுள்ள, அருள் வடிவ துரிய பரசிவன்—தன் உளத்தருளால் சார்ந்து = அவனது உள்ள (யதார்த்த) அருளைக்கொண்டு—சமன் விட்டு உரும் = உலக சிவர்கள் யாவும் தன் உயிர் போலென்று எண்ணின நிச்சய முள்ள, சமனைமதஞ்சேர்ந்து (நாபித்தான துரியத்தில் சேர்ந்து), அதையும் விட்டு (துரிய விருத்தி, துரியாதீதத்தில் ஒடுங்கி இருந்து)—உமக்கே வருஞ்சைவ நலம் = பிறகு விருத்தி வந்து உலக தேசம் யாவுஞ் சாட்சி அருளாகிய என்னிடத்தில், சாக்கிரத்தில தூல உலக தேகஞ் சொற்பனத்தில் சூட்சும உலகதேகந்தோன்றி ஒடுங்குகிறது என்ற சிவத்தின் நன்மை—கூர்ந்து மிளிர்தரும் = உலகு யாவும் சிவத்தின் அருள் வெளி என்றே, நிச்சயமாக விளங்கும்—நாவரசே = நாவுக்கு (வாக்கிற்கு) அரசாக விளங்கும், அப்பர் சுவாமியே—நல்குறவு முனஞ்சேர்ந்து யருவினற்கே = முன்னே உலக விஷய துக்க தரித்திர மடைந்து, ஏங்கி ஏங்கி துக்கப்பட்டு, உலக தேக வாழ்வானது மாயை பொய் வாழ்வு; இது சரீரத்தின் பொருட்டு நடந்து கொள்ளுகிற

காரியம், என்ற நிச்சயமும், சரீரமோ அடிக்கடி துக்கம் வருகிறது, துக்கமற்ற சுகத்தில் சீவ உயிர் வாழவேண்டு மென்ற ஏக்கத்தோடு, நூல் அனுபவந் தெரிந்தவரோடே விசாரித்து, சரீரமுள்ளபோதோ உலக மாயை நீங்கி அகண்ட அருளாகிய தன்னை, அறியத் தீவிரமுள்ளவர் களுக்கு—சிறந்தோங்குநருஞ்=எப்போதும் அருள் விவே கத்தைவிட்டு நீங்காமல் சிறப்புற்று விளங்கும்—செல்வ முமே=ஆசிரியனுல் விளங்கினவர், அருள் செல்வமே ஆரூட தசையுடையவர்.

(35) செல்வநல்லொற்றியூரன் செய்ய சங்கிலியா லார்த்து
மல்லலம் பரவைதன்கண் மாழ்குறவமிழ்த்து மேனும்
அல்லுநண் பகலுநீங்கா தவன்மகி ழடியிலெய்தி
நல்லவின் படைந்திருப்ப நம்பி:யாரூரன்ருனே.

(இ—ள்) செல்வ நல்ல ஒற்றியூரன்=நல்ல அருள் அறி வாகிய, துரிய செல்வத்தையுடைய பரசிவன், உலக மாயை யில் பற்றுதவன்—செய்ய சங்கிலியால்=இந்திரிய விஷய உலக தேகம் யாவும், அருள் வடிவாகிய சங்கிலியால்—ஆர்த்து=கட்டி—மல்லலம்=அருள் வளப்பம் பொருந்திய —பரவைதன் கண்=அகண்ட அருளாகிய தன் சாட்சி அறிவில்—மாழ்குற அமிழ்த்து மேனும்=ஒடுங்கும்படி அமிழ்த்தினுலும்—அல்லு நண் பகலும்=மனம் (கண்ட இடம்) துக்கத்திலும், நாமித்தான அருளிலும்—நீங்காது

அவன் மகிழ் அடியிலெய்தி = உலக விஷயத்தில் பந்தப்படாது, அருளை விட்டு நீங்காதிருந்து, துரியாதீதத்தில் அருளும் ஒடுங்கி—நல்ல இன்பமடைந்திருப்பன் நம்பியாரூரன் தானே = தானகவே அருளானந்த மடைந்திருப்பன், துரிய பாவை சுந்தரன்.

(36) தானே முத்தி தருருவன் சிவனவன்
அடியன் வாதவூரனை
கடிவில் மனத்தால் கட்டவல்லார்க்கே.

(இ—ள்) தானே முத்தி தருகுவன் சிவன் = பரசிவனைத் தோத்தரிக்காமலிருக்கிற போதே முத்தி தருவன்—அவன் அடியன் வாதவூரனை = துரிய பரசிவனுக்கு, அடியாகிய துரியாதீத மாணிக்க வாசகனை—கடிவு = துக்கம் (மனம்)—இல் = மனமற்று—மனத்தால் கட்டவல்லார்க்கு = துரியம் அருள் வடிவம், அருளும் ஒடுங்கி துரியாதீதப் பட்டு, பிறகு விருத்தி வந்து, உலக தேகம் யாவும் அருள் வடிவமாய், மாயை பந்தத்தில் அகப்படாமல், கட்டப்பட்ட அருள் வல்லவனுக்கு, சிவன் தானே முத்தி கொடுப்பன்.

(37) வல்லார் பிறப்பறுப்பர் வன்மை நலங்கல்வி
நல்லாதர வின்ப ஞானங்க—ளெல்லாம்
திருஞான சம்பந்தன் சேவடியே என்னும்
ஒரு ஞான சம்பந்த முற்று.

(இ—ள்) வன்மை = வளப்பம் விரும்பினவனுமல்ல—நலங்கல்வி = ஞான சாஸ்திரம் படித்தவனுமல்ல—நல்ல ஆதரவு = பொருள் சேர்த்தவனு மல்ல—இன்பம் = சுகமடைய விரும்பினவனுமல்ல—ஞானம் = முத்தியடைய விரும்பினவனுமல்ல—எல்லாம் = மேல்சொல்லிய தெல்லாம்—திருஞான சம்பந்தன் = அருளையுடைய ஞான சம்பந்தன்—சேவடியே என்று = துரிய அருள்தான் அவன், அவனது அடி (பாதம்) அது துரியாதீதம். இதுதான் உண்மை, உலக தேகாதி மாயை பொய் என்றே நிச்சயமுள்ளவர் சிவப் பிரகாசன்—ஒரு ஞான சம்பந்தமுற்று = துரியாதீத அருள் ஒன்றே உள்ளது என்று ஞான மடைந்தார்கள் நூல் விவேக முள்ள ஞானிகள்.

(க—து) மேல் சொல்லியதெல்லாம், அருளாய் விளங்கும், சாட்சி அறிவுக்கு இல்லவே இல்லை. நினைவாகிய என்னைத்துக்குத்தான் எல்லாம் இருக்கின்றது, என்னமற்ற சாட்சி அருளுக்கில்லை.

(38) உற்றுனலன் தவந்தீயினின்றுனலன் ஊண்புனலால்
அற்றுனலன் நுகர்வுந் திருநாவுக்கரசெனுமோர்
சொல்தான் எழுதியுங் கூறியுமே என்றுந்துன்பில் பதம்
பெற்றுன் ஒருநம்பி அப்பூதி என்னும் பெருந்தகையே.

(இ—ள்) உற்றுன் அலன் = பரசிவனைத்தியானம் பண்ணினவனு மல்ல—தவந்தீயினின்றுனலன் = பஞ்சாக்கினி மத்தியில், அது இந்திரியம் 5 க்கும் மத்தியாகிய, மன

சாட்சியில் சாட்சியாகவே இருந்து, தவத்தைச் செய்தவனு மல்ல—ஊண்புனலால் அற்றான் அலன் நுகர்வும் = விரதாதி என்று தண்ணியுஞ் சோற்றையும் எப்போதும் விட்டவனு மல்ல, சாப்பிட்டுக்கொண்டே, தன் சரீர கர்மத்தோடு இருந்து—திருநாவுக்கரசெனும் ஓர் சொல்தான் = உலக தேகம் சிவன் பூமி சூரியன் யாவும் அருள் வெளியாகிய, அப்பர் சுவாமி என்றே ஒரே சொல்லைத்தான்—எழுதியுங் கூறியும் என்றும் துன்பில் பதம் பெற்றான் = எட்டில் எழு தியும் வாயினல் அப்பரைச் சொல்லியும் இறப்பு பிறப்பு அற்ற மோட்சமடைந்தார், பெரிய தகமை பூண்ட அப்பூதி நாயனர்.

அகவல்

(39) பெருமிழலைக்குரும்பரெனும் பரமயோகி பெரிது உவந்துன் திருவடித்தாமரையைப்போற்றி, விரைமலர் தூய் வந்தனை செய்கின்றானென்றால் விளங்கிழையா ரிருவ ரோடும் முயங்கலாமோ, வுரைமதி நின்றனை வெறுப்ப தென்கொல் நின்னை யுடையானுக்கடுத்த செயலுனக்கு மாயின், சுரர்முனிவர் பரவுறும் பெருஞ்சீர் தொண்டத் தொகைசெய்தோய் அறமுதல் நால்வகை செய்தோயே.

(இ—ள்) பெருமிழலை = பெரிய கண்டம் (மனம் அற்று உலகு யாவும் அருள் வடிவாய்ப் பார்க்கும்)—குரு, உம்பர், என்னும், பரமயோகி = ஆசிரியத்தேவர்என்ற(குருதேவன்)

துரிய அருள் இயற்கையில் சென்ற, பரம யோகியான குரு உம்ப நாயனர்—பெரிது உவந்து = அருள் சந்தோஷத்தோடு—உன் திருவடித்தாமரையைப்போற்றி = அருள் வடிவாய் விளங்கும், சுந்தரமூர்த்தியே, உமது துரியாதீத திருவடியை, நமஸ்காரத்தோடு தோத்கரித்து—விரைமலர்தூய் = தனது கண்மலரை உன்மேல் சாத்தி (அருள் சாட்சியாக உலகு யாவும் பார்த்து)—வந்தனை செய்கின்றனென்றல் = அருள் விளக்கத்தோடு இருப்பானேயானல்—விளங்கிழையார் இருவரொடும் முயங்கலாமோ = அரன் அருளாய்விளங்கும், இந்திரிய விஷயமே அருளாகிய திருவெற்றியூர் சங்கிலி நாச்சியார் (1) நாபித்தானம், ஆறுவது அவஸ்தையாகிய ஆரூர் துரிய அருள் பரவை நாச்சியார் (1) இருவரோடும் நீர் கூடி இருந்தது சரிதானே அல்லவோ-உரைமதி = எனக்கு ஆழ்ந்த அருளோடு கூடிய புத்தி இல்லாமல், அறியாமையால் உலகத்தில் அறியாமையுடையவர்கள், விவேகிக்கு (ஞானிக்கு விதி நிஷேதமில்லை என்று இருக்க) குற்றஞ்சொல்லுகிறவர் போலவே எனக்கு உண்டாகிச் சொல்லிவிட்டேன்—நின்னையுடையானுக்கடுத்த செயலுனக்கும் ஆயின் = உமையவளுக்கும் சிவனுக்கும் பிணக்கு ஏற்பட்டால் சுந்தரம் நீர் போய் பிணக்கை நீக்கி கூட்டிவைப்பாய். பரவைக்கும் உனக்கும் பிணக்கு ஏற்பட்டால், பரசிவனே வந்து பிணக்கை நீக்கி கூட்டிவைக்கும்

படியான, தோழனுகிய சிவனுக்கு, அருள் கெங்கை என்ற பெண்ணை தலையிலும், உமாதேவி என்ற பெண்ணை இடையிலும், வைத்து இருக்கிறபோது, உன்னையான் சொல்வது எனக்கே தவமுகும்—சுரர் முனிவர் பரவனும்=தேவர் களும் முனிவர்களும் தோத்தரிக்கும்—பெருஞ்சீர்த் தொண்டத் தொகை செய்தோய்=பெரும் அருள் சிறப்புப் பொருந்திய அறுபத்து மூன்று நாயன் மார்களையும், அருளை யுடைய துரிய பரசிவன் என்றே, துரியாதீதத்தில் வணங்கு வேனென்று வணக்கஞ் செய்துகொண்டு—அறமுதல் நால் வகை செய்தோயே=அறம் (இந்திரிய தருமம்) பொருள் (மனம் நினைத்து இச்சிப்பது) இன்பம் (காமித்தான துரிய அருள் சுகம்) விடு (அருள் ஒடுங்கின துரியாதீதம்) என்று சொல்லிய, நான்கையும் அருள்வடிவாய்க் காட்டி விளங்கிய, சுந்தரமூர்த்தி சுவாமியே உமக்கு நமஸ்காரம்.

(40) செய்யவார் சடை தெய்வசிகாமணி
பாதம் போற்றும் வாதவூரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டு
பூவெனப் படுவது பொறி வாழ் பூவே.

(இ—ள்) செய்யவார் சடை தெய்வ சிகாமணி=திருத் தமாக உலகு யாவும் அறிவு சடையாகவும், அதி தெய்வங் களுக்கு (இந்திரியாதிகளுக்கு அதிதேவதை) நாயகமாக விளங்கும், அருளையுடைய துரிய பரசிவனது—பாதம்

போற்றும் வாதவூர் அன்ப=பாதத்தையே (துரியாதீதத்தையே) தோத்தரிக்கும் மாணிக்க வாசகனே—பாவெனப் படுவது உன்பாட்டு=யாவர் தோத்திரப் பாட்டிற்கும் (இந்திரிய தோற்றம் யாவுக்கும்) மேலானது உன்பாட்டு (துரியாதீதத்தில் தான்)—பூவெனப் படுவது பொறிவாழ் பூவே=இந்திரியப் பூவிற்கு மேல், உலக லட்சுமி மாயை தங்கி இருக்கும்படியான நாபித் துரிய அருள் ஈரேழுலகுக் குந்தாயான சாமவேத சொரூபிதான் பொறிவாழ் பூவு.

தேவாரம் திருவாசகமென்கிற தமிழ் வேதம் செய்தருளிய சைவ சித்தாந்த சமய ஆசாரியர் நால்வர்களுக்கு, வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவலுமாக சிவப்பிரகாசம் நால்வர் நான்மணி மாலை செய்தார். அதைமுன்காலம் தருமபுரத்தாதீனத்தார் மேன்மையாய் ஓலையிலெழுதி தலையிலேயே வைத்திருந்ததாக நாலுரை பாடஞ்சொன்னவர்கள் சொன்னார்கள்.





உ

சர்வம் சிவம்.

ஷை யார் செய்த

# சோண சைல மாலை

உண்மையுரை



நூலிடைப் பூங் கோதையரல்குல் ஒளிமணிப்,
பாம்பு தீண்டுதலால்
மயங்குவேன் தனக்குன் பதமருந்தூதவி மயக்கமென்
ஞெழித்தருள் புரிவாய்
முயங்குமா புகழ்பூம் புகலி யந்தணர்க்கு முத்துவெண்
பந்தலீந் தகல்வான்
தயங்குமின் முத்துப் பந்தல்வாழ் சோண சைலனே
கைலை நாயகனே.

(இ—ள்) முயங்குமா புகழ்=உலகம் பஞ்ச இந்திரிய பஞ்ச விஷயம் அது சத்த, பரிச, ரூப, ரச, கந்த (வாசனை யோடு) 5விஷயமேதான், நாமரூப உலகமாய் விளங்குகிறது. இதற்கு வேருக, உலகதேக மாயை உலகம் இல்லை. பாக்கி இருக்கிறது அகண்ட அறிவாகிய சிவன்தான். உலகம் அப்படி விளங்கினுலும், உலகமானது, மா=பெருமை அது புகழ் அருள் வடிவம் (அறிஞருக்கு உலகு ஆனந்தமயம்,

வாசிட்டம்) உலகோ அருள் வடிவம்—பூம்புகலி = அழகிய அருளைப் (புகல் + இ) புகலி உலகுயாவும், அருள்விளக்க மென்று,சொல்லும்படியான—அந்தணர்க்கு = (அம்-தணல் கு) உலகுயாவும், ஞான அக்கினி (மாயையுலகதேகத்தை அருள்மயமாய் ஆக்கும்படியான அக்கினி) அருள் வடிவாய் விளங்கிய ஞான சம்பந்தருக்கு—முத்து வெண்பந்தல் ஈந்து = தன் அருளே பலவித மாயா விசித்திரமாய், உலக தேகந்தோன்றச்செய்து, சிவாத்மா துரிய சொரூப ஞான சம்பந்தனுக்குக்கொடுத்து—அகல்வான் = (அகல்—அகண்ட வான் = வெளி.) அகண்டஅறிவுவெளியாய்—தயங்கும் = விளங்கும்—மீன்முத்து = கண்முதலிய இந்திரியம்மீன், பஞ்ச விஷயம் அருள் முத்து—பந்தல் = உலகதேக மாயாபந்தல் -—வாழ் = விளங்கும்படி—சோணம் = அக்கினி—சைலம் = மலை—கைலை = துரிய கைலாசம் — நாயகனே = ஈரேமூல கத்தையும்,தோற்றிஒடுக்கும்படியான அருளையுடையவனே.

உயங்கும் = துரியாதீதத்திலிருந்து—நூல் இடை = துரியாதீதப் பஞ்சிலிருந்து நூல் உண்டானது போலவே, இடையில் தோன்றிய—கோதையர் = அருள், அது துரிய விருத்தி—அல் = உலகதேக மாயையில், அருளானது பற்றி இல்லாதது, கட்டுப்படாதது, பந்தப்படாதது—குல் = அருள் துரியமில்லாமல், உலகதேக மாயையானது வேறாகவே பொய்யாய்த் தோன்றி இருப்பதற்கு, வேறே இடமில்லாம

விருப்பதினாலும் கூடியிருப்பது என்றும்—ஒளிமணிப்பாம்பு —மனமாயைப் பாம்புக்கு, இந்திரியம் 5ம் தலை, மணி மாணிக்கம் பஞ்ச விஷயம், அதற்கு விஷயம் இச்சை, இப்படி விளங்கும் மனமாயைப் பாம்பானது, சீவாத்மா விஷய அபிமானியைத்—தீண்டுதலால் = இச்சையைக் கொடுத்த வினால்—மயங்குவேன் தனக்கு = சீவாத்மா துரிய சுக சொரூபமாகிய நான், மனப்பாம்பு என்னையாகிய பாம்பு, என்னைக் கடித்து உலக தேகம் மாயையில் (பொய்யில்) சத்தியமென்ற இச்சையாகிய விஷம் யேறி, குடும்பத்தை பாவத்தினால் நசித்து விடுகிறது என்றும், புண்ணியத்தினால் பிள்ளை குட்டி குடும்பம் விருத்தியாகுமென்றும், சத்திய நிச்சய புத்தியோடு, குடும்பம் விருத்தியாக்கவும் தனக்குப் புண்ணியம் விருத்தியாக்கவும், பாவத்தை நீக்கவும், ஆலயாதி தீர்த்தம் ஆடுவதும் தெரிசிப்பதுமன்றியும், இறந்தவர்கள் பாவத்தை நீக்கும் பொருட்டும், இறந்தவர்களால் தனக்குப் புண்ணியத்தைச் சேர்க்கவும், குருபூசை கருமாதி, திதி முதலியது செய்கிறதினும், தான் ஆலயபூசை உர்சவம் தெரிசனம் தன் ஆத்மார்த்த பூசை, தியானம் செபம், அனுஷ்டானம், காவி உருத்திறாக்கந் தரிப்பதும், ஆலயாதி சத்திரங்கட்டி சாப்பாடு பூசையாதிகள் நடத்துவதினால் உள்ள புண்ணிய விசேஷத்தினாலும், நமது குடும்பமும் நாமும் மடமும் சத்திரமும் கோவிலும் மேன்மேலும்

அதிக சொத்தும் விருத்தியடையுமென்று நிச்சய புத்தியினால், இச்சையையுடைய பேத புத்தியோடு, உலக மாயைப் பொய்யில் பொய்யான மோட்சமும், பொய்யான சிவனாகிய நாம், அடைவோமென்று நான் யோசித்துப் பார்த்து மயங்கிக்கொண்டு, நான் எதைச் செய்கிறது என்று விசாரித்தால், ஆத்மஞான சாஸ்திரம், வாசிட்டம், கீதை, வேத உபநிடதம், பத்தி சாஸ்திர ஞான சம்பந்த வள்ளலார் அப்பர் சுந்தரர் தேவார நூல்களிலும், உலகதேக மாயைப் பொய் என்று சொல்லியும், எங்கும் நிறைந்த அரூப வஸ்து, அதைப் பிரம்மம் சிவம் என்றும், அது ஏக சிதாகாச புருடன், அவனையன்றி வேறாகத் தோன்றும் உலகதேக பூமி சூரியாதி எல்லாம் மாயைப்பொய் என்று சொல்லி இருக்கின்றார். அதை நிச்சயஞ்செய்து நடந்து கொள்கிறதா? மேல் சொல்லிய பூசையாதி உச்சவம், கருமாதி கிரியுஞ் செய்கிறதா? பூசையாதி உச்சவம் கருமாதி கிரிகளைவிட்டு குடும்பத்தைமாத்திரம் பிறருக்குத் தீங்கின்றி செய்து தீரவேணுமா? குடும்பஞ் செய்யாமல் குடும்பத்தை நீக்கி காவி சன்யாசமாய் இருக்கின்றதா? என்று நிச்சயம் விளங்காமல் பயித்தியம் பிடித்தது போலும், விஷயத்தில் வெறிகொண்ட சுவானம் போலு மிருக்கின்றேன்—உன் பதமருந்துதவி = ஆசிரியனே (குருநாதனே) உனது எதார்த்த துரியாதீத திருவடியைக் காட்டி, உலகதேகம்

மாயை அல்ல, அருள் வடிவமே என்று விளக்கி—என் துயர் ஒழித்து அருள் புரிவாய் =சீவனாகிய எனக்குப்பேத உலக கர்மம் சத்தியமும், கர்மஞ் செய்கிறதினால் சுகமென்று நிச்சய புத்தியோடும், நம்பி இருந்து செய்தால், புண்ணிய பலன் கிடைக்குமென்று சொல்லுகிற நிச்சய மூட நம்பிக்கையாகிய துக்கத்தை நீக்கி அனுக்கிரஹஞ் செய்வாய். உலகத்தில் நன்மையடைய விரும்பினவர்களுக்கும், வந்து கேட்டவர்களுக்கும், உன்பேரில் அவர்களுக்கும், அவர்கள் பேரில் உனக்கும், எவ்வளவு எவ்வளவு அன்போ அவ்வளவு அவ்வளவு அருள் செய்வாய் என்றார் சிவப்பிரகாச சுவாமி. மிருகப்பிரகாசர் சொல்லவில்லை. தேகமேதானென்ற அபிமானி மிருகப்பிரகாசர்.

(29) மெய்த்தவரடிக்குற் றேவலின் திறத்தும் விளங்கு
மாகம உணர்ச்சி யினும்
புத்தலர் கொடுத்திற் பரவு பூசையினும் பொழுது
போக்கெனக் கருள் புரிவாய்
முத்தமு மரவ மணிகளு மெறிந்து முதிர்தினை
புனத்தெயின் மடவார்
தத்தைகள் கடியுஞ் சாரலஞ் சோண சைலனே
கைலை நாயகனே.

(இ—ள்) முத்தமும் அரவமணிகளும்=இந்திரியம் (5) ஐந்து விஷயம், சத்த, பரிச, ரூப, ரச, கந்தமாகிய 5 வகை

முத்துக்களும். சாட்சி அறிவாகிய சொரூபத்தில் என்னை மாகிய மனப்பாம்புக்கு, பஞ்ச இந்திரியம் மாணிக்கம், பஞ்ச இந்திரிய மாணிக்கத்தை கக்கிவைத்து, பஞ்ச புலனுகிய விஷய வெளிச்சத்தில், உலகம் முழுப்பொய், முழுப்பொய் யாகிய மாயைப் பொருள்களில் மேய்ந்து (உலக தேக குடும்பத்தில் அபிமானத்தோடு மேய்ந்து), பிறகு இந்திரிய மாணிக்கத்தை விழுங்கி, மனப்பாம்பு, மனசாட்சியாகிய தனது வளையில் வந்து ஒடுங்கும். இப்படி ஒடுங்கும்படி யான மனப்பாம்பின் இந்திரிய மணிகளை—எறிந்து= நீக்கி —முதிர்தினை புனத்து= இந்திரிய விஷய இச்சைகள் முதிர்ந்த தினையாகிய விஷய தூக்கமான புனத்து (கூட்டத்து)— எயின்மடவார்= சாட்சி அருளாகிய அண்ணுமலையில், விஷ யாதிகளில் மனம், (அது விஷயஇச்சைதான் மனம்) அற்று மிஞ்சின விருத்தியானது, அருள் துரியத்தில் ஒடுங்குகிற விருத்திதான், எயின் மடவார் (துரியத்தில் ஒடுங்குகின்ற அருள் ஸ்திரீகள்)—தத்தைகள்= இந்திரியத்தில் இச்சை யுள்ள மனமாகிய கிளியை—கடியும்= ஓட்டும்படியான; அருள் சாரலையுடைய சோண சைலனே கைலை நாயகனே. சாரலென்பது, துரிய அண்ணுமலையில் தங்கி இருக்கும் படியான அருள் சக்திதான் சாரல். இருதயப் புற்றிலிருந்து பாம்பு வெளிப்படுகிறதாக நூல்களில் சொல்லி இருக்கின் றன.

மெய்த்தவரடிக்கு உற்ற எவலின்திரத்தும்= அழிவின்றிய துரியாதிதத்தில், உற்ற அதில் ஒடுங்கி வந்து, உலகு யாவும் அருளாய் விளங்கிய குருபுத்திரனுனவர், விஷய எவல்களைச் செய்தும்—விளங்கும் ஆகம உணர்ச்சியினும்= உலகதேகம் விளங்கும்படியான, மனம் இந்திரியமாகிய ஆகமம் சூட்சும சரிரம், அதன் உணர்ச்சியினும், மனோராச்சியத்திலும்—புத்தலர் கொடு= சாக்கிரந்தோறும் புதிது புதிதாகவே வந்து வந்து பூத்த இந்திரிய மலர் புட்பங்களை வாடாமல், அது இந்திரிய விஷய உலகதேகத்தில் சுக துக்கத்தில் இச்சைப்பட்டு வாடாத இந்திரிய மலரைக் கொண்டு—பரவு பூசையினும்= துரிய அருள் சிவனுக்கு சாத்தி பரவும் அது உலகுயாவும் அருள் வடிவாய் விளங்குகிறது என்றே வேதாந்தஞ் சித்தாந்தந் தெரிய விரும்பினவர்களுக்குச் சொல்லும்படியான பூசையினும்—பொழுது போக்கு எனக்கு அருள் புரிவாய்= உலகம் பொய் மாயையில் கல் சுவாமியில் பூவோடு பூசித்து அழிவில்லாத மோட்சமடைய விரும்பினவர்களுக்கு, வெளிபூசை செய்வதில் அஞ்ஞானமாகிய அறியாமையே மிஞ்சுமென்று சொல்லி அப்படிப் பொய் மாயையில் பூசிக்கச் சொல்லுகிறவர்கள், பொய்யான சடத்தைப் பூசிக்கிறதானது, உயிர்போயின பிரேதத்தை குளிப்பாட்டி. பூவுஞ்சந்தன வஸ்திரஞ்சூட்டி அலங்காரத்தோடு, முன்னும் பின்னுங்கட்டி அழுகிறது

போலாகும். மெய்யான உண்மை விளங்காமல் கெடுக்கிற வர்களாவார்கள். அவர் சொல்லையுஞ் செய்கையும் நீக்கி உண்மையைப் போதிக்கும்படியான அநுக்கிரகஞ் செய் வாய் என் குருநாதனே என்றார்.

வாசிட்டம், தேவ பூசைக்கதையில் இராமனுக்கு, துரியாதீதத்தில் யாவும் அருளாய்ப் பார்ப்பதே பூசை என் றார். கீதையில் எங்கும் யாவும் நானாகவே இருக்கின்றேன் என்று பார்ப்பதுதான் பூசை என்றார். ரிபு கீதையில் தன்னை யன்றி வேறில்லை என்றுபார்ப்பதேபூசைஎன்றார். வேதாந்தி சித்தாந்திகள் படிக்காதவர்களே கல்செம்பில் பூசி என்று சொல்வதே கூடாது.

(57) கந்தர மிருந்தும் அடகு நீரயின்றுங் கரநிலத் தமைத்திரு பதமும்,
அந்தரநிமிர்த்து நின்நிலை யறியார் அரும்பவ மொழியுமோ வுரையாய்
இந்திரன் வனத்து மல்லிகை மலரின் இன்னடை சாத்தியதென நிறைந்த,
சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோணை சைலனே கைலை நாயகனே.

(இ—ள்)இந்திரன் வனத்து = ஞானேந்திரியம் 5ம் தே வர்கள். அவர்கள் அதிகாரத்தேவர்கள். கருமேந்திரியம் 5ம் கருமத்தேவர்கள். அதிகாரி காட்டியபதை, செய்துமுடிக்கும் படியான தைரியமுள்ள கருமத்தேவர்கள். இவர்களுக்கு அதிகாரியோ நேத்திர இந்திரியத் தேவேந்திரன்தான்

அரசன். கண் இந்திரிய விஷய உலகம் தேவலோகம் அதா னது தூல தேக அபிமானம் இன்றி ஆளுவான். கண்ணை மூடினல் உலகமும் தேவர்களும் மற்றவர்களுமில்லை. அப்போது சுத்தசூந்ய அறிவுவெளிதான் தானுகவே இருக்கும். இப்படியுள்ள கண் இந்திரியத் தேவேந்திரனுக்கு, கண் இந்திரிய விஷய உலகம் அவனது நந்தவனம். நந்தா கெடாதவனம். தேகத்தைத் தானென்ற இச்சையோடு அபிமானங்கூடினல் மனிதி மனிதன். இச்சை என்பது தேகம் நான் என்கிற அபிமானம். அது தொழில் காரியத்திற்கு மாத்திரம், தொழில் முறையிலிருந்தும், மற்றபோது தேகந் தானென்ற இச்சை விட்டிருந்தால் மனிதி மனிதனல்ல. தேகத்திற்குத்தான் உறவினர் பந்துக்கள் முதலியது பந்தம். தேகம் சீவனுக்குக் கட்டடம் (வீடு) போல் இருக்கிறது. சீவனுக்குத் திரிசியத்தில் (வெளியில்) தனது என்கிற உறவு இல்லை. தேகந் தானென்று நான் மனிதி மனிதனென்ற எண்ணம் எந்த நேரமும் இருக்காது, கெட்டுப்போகிறது. இச்சை என்பது அடிக்கடி கெட்டுப்போய்த்தான் (அழிந்து போய்) வரும், இச்சை இன்றி விளங்கும், தேவேந்திரன் வனத்தில்—மல்லிகை = ஒரு ஒரு விஷயம் அது சத்தசெடி, பரிச்செடி, ரூபசெடி, ரச செடி, கந்த (வாசனை) செடி, பஞ்ச பல பல செடி—மலர் = விஷய இச்சை, மணம் அதிலுள்ள லாபம்—இன்மை சாத்திய

தென = இவ்வனத்தில் உண்டாகிய இச்சையானதெல்லாம் கொண்டை மாலையாக அது உலகதேக மெல்லாம் அருள் வடிவ சிவனே என்று சாத்திவிட்டு (அநுபவமாய்த் தெரிந்து கொண்டு)—நிறைந்த = யான் எனது என்று சொல்லிய உலகதேகம் யாவும், பரிபூர்ண அருளாய் நிறைந்த—சந்திரன் முடிமேல் வந்துறும் = அருள் வடிவமன சுக சந்திரனே தான் அறிவாகிய முடியில் விளங்கும்படி, நேத்திர இந்திரியத்தேவேந்திரன், சாத்தப்பட்டு விளங்குருஞ் சோனைசைலனே கைலை நாயகனே.

கந்தரம் = மலைக்குகை—இருந்தும் = குகையிலிருந்தும் தவஞ்செய்தும்—அடகு = இலைகாய்கள் — நீர் = சுனைத்தண்ணீர்—அயின்றும் = சாப்பிட்டும்—கரம் = கையை—நிலத்து = பூமியில்—அமைத்து = பூமியில் கையைவைத்தபடி—இருபதமும் = இரு காலையும்—அந்தரம் = ஆகாயம்—நிமிர்த்து: = இருகாலைத்தூக்கியும், தவஞ் செய்தும்—நின் = துரிய அருளாய் மலையாய் விளங்கும் ஆசிரிய அண்ணமலையாரே உமது—நிலை = உலகதேகம் யாவும், அருள் அறிவு வெளி என்று நிச்சய அநுபவ புத்தி இல்லாமல், உலக தேகம் மாயை பொய்யில் பேதங்கள் உண்மை நிச்சயத்தோடு, மேல் சொல்லிய குகை தவம் முதலியதை செய்வதானது, அறிவு இன்றிய மூடராவார்கள். அது செய்யவேண்டாத காரியம். அதைச் செய்வது முழு மூட முட்டாள் புத்தியே

யாகும். தானுகிய சிவத்தை அடைய சாஸ்திரங்களில் விசாரித்துத் தெரிந்து கொள்வது ஞானமென்று சொல்லி இருக்கின்றது. அந்த சுத்த சூன்ய அறிவு வெளியை, ஆசிரியனுல் தெரிந்து கொள்ளச் சொல்லி இருக்கிறதே தவிர, முகை தவம் முதலியதை செய்வதாய்ச் சொல்ல வில்லையே. இசனுல்தான்—அறியார்=அருள் அறிவு வெளியாகிய சிவன்தான் எங்கும் எப்பொழுதுமுள்ளது என்று நூல் சொன்னபடி, விசாரம் பண்ணி அநுபவம் விளக்கிக்கொடுக்கும் விவேகிகளோடு கூடித் தெரிந்துகொள்ளாதவர்கள்—அரும்பவம் ஒழியுமோ=மிருகாதி பரியந்தம் பிறவித் தவிப்பாகிய பிறவிச் ஜென்மமானது நீங்குமோ—உரையாய் =இதைக் கேட்கிறவர்கள் ஊகித்துச் சொல்வாய் என்ருர்.

(க—து) தேவேந்திரன் தூரிய அருள் அண்ணுமலையாருக்கு கொன்றை மாலை சாற்றினதுபோலவே சாற்றினவர்களுக்கு பிறவித்துன்பம் நீங்கும்படியான மோட்ச அநுபவம் உண்மை என்ருர்.

(59) கானமே மருவும் விலங்கினுங் கடையேன்
கற்பவை கற்றிலேன் விடய
ஞானமே யுடையேன் அறிஞரைக்காணில்
நாணிலேன் உய்யுநா ளுளதோ.

(இ—ள்) கானமே மருவும்=காட்டிலே பிறந்து முழு மூடமாக பேத நிச்சய கோபத்தோடு சஞ்சரிக்கும்—விலங்கினுங்கடையேன்=கல்வி கற்கவும் கேட்கும்படியான

மனிதி மனிதனைப் பிறந்தும், மிருகத்தைக் காட்டிலும் மூட புத்தியுடையவன்; மாயைப் பொய்யுலகில், சரீரந்தானென்ற பேதபுத்தி நிச்சய கோபதாபத்தில் பந்தத்தோடு இருக்கின்றேன்—கற்பவை கற்றிலேன் = கற்றுக்கொள்ள வேண்டிய ஆன்ம ஞான சாத்திரங் கற்றுக்கொள்ளாமல், அறியாமை யாகிய அஞ்ஞான மூடனைப், உலக வியவகாரத்தில் கிரம மின்றிய அஞ்ஞான பந்தத்தோடு, உலகதேக விஷயத்தில் அபிமான மூர்க்க புத்தியாகவே இன்ன மிருக்கின்றேன்— விஷய ஞானமே யுடையேன் = விஷய உலகதேக பூஷணை யின் நிமித்தமும் பிள்ளை பெண்சாதி புருஷன் பௌத்திராதி நிமித்தமும், இதுகள் விருத்தியாக்க தீவிர விருப்பங் கொண்டு மூட இச்சையாக ஆலயாதி தீர்த்தம், இதுகள் வேண்டாத காரியத்தை முழு மூடமாக நம்பி செய்து இருந்து விட்டேன்—அறிஞரைக்காணில் நாணிலேன் = ஆன்ம ஞான நூலையாவது விவேக ஞானவானையாவது பார்த்து யோசித்தும், தான் செய்கிற காரியங்களைப் பார்த்து யோசித்தும், மூட அஞ்ஞான காரியங்களை விட்டு நீக்க, எனக்கு வெட்கம் வந்ததே இல்லை—உய்யு நாளுள தோ = மோட்சசுகம் இப்படியுள்ள எனக்குக்கிடைக்குமோ.

(க—து) சீவாத்மாவாகிய மனிதி மனிதர்களுக்கு, முந்தி தெரிந்துகொள்ள வேண்டியது சுய பாஷை போல, சுயகல்வி ஆத்ம ஞான சாஸ்திரந்தான். அதை சுலபமாய் தெரிந்துகொள்ளலாம். அப்படி சுலபமானதை மூடர்கள்

விளங்காமல் செய்து தபம் தியானம் மலைகாடுகளில் போகஞ்செய்கிறது என்று அல்லல் பண்ணிவிட்டார்கள். இராமன் அரண்மனையிலிருந்து இராஜாங்கத்தில் யாவரு மிருக்கவே ஞானங்கேட்டான், அர்ச்சுனன் யுத்த களத்தில் கேட்டான், கட்வாங்க மகாராஜன் தன் அரசாங்கத்தில் ஒரு கடிகை (இரண்டரை நாழிகையில்) ஞான விசாரங் கேட்டு மோட்சமடைந்தானென்று சொல்லியிருக்கின்றது. அவ்வளவு சுலபமாய் விசாரித்து ஞானமடையலாம், சந்தேகமில்லை. ஞானம் விளங்கிக்கொண்டு பிறகு தொழில் காரியங் கற்றுத்தெரிந்தும், பிறர் பாஷை தெரிந்து கொள் வதுபோல, சக்தி இருந்தால் பிறர் சாத்திரமும் தெரிய வேண்டும். இதுகளை விட்டுவிட்டு மூடர் சூட்சியினால், மூடமாக கற்பனை புராணாதி ஆகமக் கட்டு, ஒன்றுக்கு ஒன்று முறணாகவே சொல்லி இருப்பதைக் கேட்டு நடந்து கொண்ட பழக்கத்தினால், பழக்க மூட வெறியோடு கூடிய மிருகப் புத்தியே திடப்பட்டு விட்டது. நீண்ட நாளாய் அருள் அன்பானது, மனிதி மனிதன் யாவரும் அரூப வஸ்து கடவுளாகிய ஆண்டவன் பிள்ளைகள். கடவுள் எப் போதும் ஒருவருக்காவது திங்கு நன்மைகள் செய்கிறவ ரல்ல, அவருக்கு வேண்டிக்கொள்ளவும் அவரை வணங்க வும், பூசிக்கவும், அவருக்கு சோறுகொடுக்கவும், வாழ்த்தவும் வேண்டியதில்லை. மனிதி மனிதனிடத்திலும், பேதமின்றி அன்புபாராட்டுவதுதான் கடவுளுக்குபக்தி பணி செய்வதா கும். அது மனிதி மனிதனாகிய அபேத அன்பாகும். அது வன்றி பேதமூட கோபதாபமிருப்பது மிருகாதி ஜென்ம மாகும்.

ஞானசம்பந்த வள்ளலார் கடைசி மரபு அட்டவணையில்
பஞ்சாக்கர முந்தி நிலை கூறியது.

(8) தேவே திருஞான சம்பந்த தேசிகனே
ஓவிலெழுத் தஞ்சினையும் ஓதாய்கொல்—ஆவியார்
பின்னிரண்டைத் தள்ளிப் பிரியாத வானந்த
முன்னிரண்டைக் காணுதல் முத்தி.

(இ—ள்) திருஞான சம்பந்தமுடைய ஞானசாரியனே ஓர் காலத்தும் ஒழிவு இன்றிய அஞ்செழுத்தின் உண்மையைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்வாய் என்ற வினவிற்கு விடை:-யகாரமாகிய ஆன்மா பின்னாகிய நகாரமகாரங்களைத் தாக்கபேதம் (காரணம்) வென்றுத்தள்ளி, முன்னாகிய வகார சிகாரங்களை விட்டுப் பிரியாதது, ஆனந்த ஏதுவென்று தழுவிக் காணுதல் முத்தி நிச்சயமென்றவாறு

பஞ்சாக்கர சொரூபமாகிய திருவம்பல தரிசன
நடனத்தைக் கூறியது.

(9) முத்தி நடனத்தை மொழி ஞான சம்பந்தா
சத்தி திருவம்பலத்தில் தான்தானாய்—சுத்தவுயிர்
கான முயலகனைக் காலால் அழித்தருளித்
தானு நடம்புரிவன் றூன் (நடராஜன்) (2)

(இ—ள்) மோட்ச நடன தரிசனத்தை, யான் காணத் திருவாய் மலர்ந்தருளவேண்டும், திருஞான சம்பந்த தேசிகனே என்ற வினவிற்கு விடை:- வகாரமாகிய சிற்றம்பலத்தின் கண்ணே, சிகாரத் திருமேனியோடுங் கூடினவனாய், யகார வுயிராகிய சுத்த ஆன்மாக்கள் தெரிசிக்கும் பொருட்டு ஆணவமலமாகிய முயலகனை ஒரு வலது பாதத்தில் ஊன்றி

மாயையை இடது பாதத்தில் தூக்கி உதைப்பான், தவா னந்தத்தாண்டவருமயன்; நடன தரிசனத்தைக் காண்பாய் என்றவாறு. இந்திரிய விஷயத்தில் அபிமான முயற்சி முயலகன்.

அணைந்தோர் தன்மையும், ஆனந்தப் பேற்றையுங் கூறினது.

(10) தானே சிவமான சத்திய ஞானாநந்த
மோன நிலை சொல்காழி முன்னோனே—ஞானிகள்தம்
உள்ளமா காயமாம் ஒன்றுய வானந்த
வெள்ளமாய் நிற்குமவர் மெய். (3)

(இ—ள்) ஊன சம்பந்தங்களெல்லாம் ஒருவி (நீக்கி) ஞான சம்பந்தப்பட்டு, சத்திய ஞானாநந்தத்தைப் பெற்ற, மௌன யோகிகள், நிறைவு நிலையைச் சொல்ல வேண்டும், காழித் துரைச்சாமி என்ற வினாவிற்கு விடை:- ஞானிகளுடைய உள்ளம் (சிவசாட்சி) ஒன்றையும் பற்ருது, அது ஆகாயம் போலவே நிற்கும். அவாள் அருள் சரீரம் ஏக பூர்ண ஆனந்த மேலிட்ட பிரவாகமாய் நிற்குமென்றவாறு.

(க—து) உள்ளம் ஆகாயமென்றது, பராசத்தியை அது துரியவிருத்தி அருள். மெய்யானந்த வெள்ளமென்றது, நாபி துரிய அருள் சுக விளக்கத்தை. மௌன யோகிகளென்றது, துரியாதீத அறிவை. மலநீங்கிய சுத்த ஆன்மாக்களென்றது, நகாரம் மனவிருத்தி கண்டம் தொன்பதம், மகாரம் நெஞ்சு மாயை அகண்ட காரவிருத்தி தற்பதம், நீங்கி நாபி அசிபத துரியத்தில் சென்றவர்கள் சுத்தான்மா.

---

கமாலிய்யா பிரஸ் (லிட்) —:( முற்றிற்று ):— கூத்தாநல்லூர்.

## ஆக்கியோன் பெயரும், நூலின் விபரமும்.



திருச்சி ஜில்லா ஜெயங்கொண்டம் தாலூகா மீன்சுருட்டி (போஸ்ட்டு) கிழ்பால் 3-மைலிலுள்ள குடிக்காடென்கிற மேலணிக்குழி நா.அ. வீரகோளரி கோத்ரம் சிவசரீர பரம்பரை சின்னசுவாமி முதலியார் மகன் பிரதம (ஏகன்) வைத்தியலிங்கன் சரீர சீவன் இயற்கைப் பெயரை வைத்துக்கொண்டு, சுவாமி சிசியனென்று இடையில் கற்பனைப் (சேர்க்கை) பெயரை நீக்கிக்கொண்டேன். இந்நூலில் ஷை உண்மை உரை செய்த நூலின் பெயர்—அநுபவ ஆத்ம ஞான விளக்கம், சத்தாவஸ்தை அனுபவம் ஆத்ம ஞான சம்பந்தர், ஆத்ம இதிகாச சாகை, விநயகரகவலுரை ஆத்ம ஞான திட்சை, 2-4 பக்கம் எடு-2, ஆக 8ம் இலவச வெளியிடு செய்தவன், இந்நூலும் உண்மை உரை செய்து வெளியிட்டான். இந்நூலை இலக்கண இலக்கிய சித்தாந்தி வேதாந்தி, தற்கால F. A. படிக்கின்றவர்களுக்கும் மதுரை முதலான தமிழ் சங்கத்தினரும், இதை முதல் நூலாகக் கொண்டு புர அர்த்தம் (பொய்புரை) என்றும் இதுநாள் வரையில் சொல்லிக் கேட்டு வருகின்றார்கள். சிவபாத இருதபர் கோத்ரம் சம்பந்தர், வாகிசரிஷி கோத்ரம் அப்பர், கைலாச நந்திசர் கோத்ரம் சுந்தரம், வாதபுரீசன் கோத்ரம் மநோன்மணி அருள் வாசகன். இதுகள் யாவும் சரீர மாயை கற்பனையில் சொன்னது. அரூப அறிவு வெளிதான் உண்மை.

# அறிவிப்பு

இப்புத்தகம் எம்மால் இயற்றப்பட்டு கிழ்க் காணுபவர்களிடம் கிடைக்கப்படு மாகையால் விரும்புவோர்கள் அதை வாங்கிப் படித்துப் பிறருக்கும் தெரிவித்து விளம்பரப்படுத்துமாறு பெரிதும் விரும்புகின்றேன்.

கிடைக்குமிடங்கள்:—

1. வே. கந்தசாமி பிள்ளை, புள்ளமங்கலம் P. O.
(Via) திருநாட்டியத்தான்குடி.

2. வே. ரேத்தின சபாபதி உடையார்,
பயித்தஞ்சேரி,
நீடாமங்கலம் P. O.